# புதுயுகம

கவி. கா. மு. ஷெரீப்



தமிழ் முழக்கம் பதிப்பகம்
சென்னை-14

# முன்னுரை

வணக்கம்,

புதுயுகம் என்ற இந்த நூலிலே, மனித சமுதாயம் ஏக குரலில் ஒப்புக் கொள்ளக்கூடிய ஒரு தத்துவம், கருவூலம் கொண்டிருக்கிறது.

இந்த நூலை எந்தக் கட்சிக்காரரும்—எந்தப் 'பாவி'யும் பகிரங்கமாகப் படிக்கலாம். தனிப்பட்ட தாக்குதல்களோ, ஆபாசப் பகுதிகளோ துளியும் கிடையாது.

கதாபாத்திரங்களெல்லாம் சுயேட்சையாகத் தோன்றுகிறார்கள். சுயேட்சையாக உலாவுகிறார்கள். சுயேட்சையாகப் பேசுகிறார்கள். ஆனால், சேகர்மட்டுமே பருவத்தின் கோளாரால் சிந்திப்பின்றி நடந்து தீமை புரிந்து விடுகிறான். என்றாலும், கடைசி வரையிலும் அவனும் தீயோனாகவே இருந்துவிடவில்லை. கதாபாத்திரங்கள் அடங்கலும் என் சொந்தச் சிருஷ்டியே. எனினும், 'நோஞ்சா'னே எனது விருப்பத்திற்குரியவன். காரணம், அவனைப்போன்ற அப்பாவிகளை—கபடமற்ற உள்ளம் படைத்தோர்களை—காண்பது அரிதாக இருக்கிறது.

படித்த பெண்கள் முழுமைக்கும் என்று சொல்லாவிட்டாலும், ஒரு சிலருக்காவது பிரதிநிதித்துவம் பெற்று விளங்குகிறாள் கமலா. படித்த பெண்கள் முழுமைக்கும் இவள் போன்றோர் பிரதிநிதிகளாக ஆகிவிடக்

கூடாதென்பதற்காகவே இவள் இக்கதை யில் இடம் பெற்றிருக்கிருள்.

'புஷ்பா'வின் பிறப்புக்கள் சமுதாயத்தி லிருந்து வேரறுக்கப்பட வேண்டும். 'மது நாதன்' தற்கொலைகள் தடுக்கப்படவேண்டும். தவணைக் கடை 'ச. க.' போன்றூர்களின் இரு தயங்கள் மாறவேண்டும் என்பதை விளக் கவே இவர்களும் கதையில் வருகிறூர்கள்.

'செல்லம்' நமது நாட்டில்—நம் கண்முன் நட மாடும் ஒரு உருவம் இவள் போன்றூருக்காக இன்று நாடே பரிதாபப்படுகிறது.

முருகன்-வள்ளி, ராஜாவின் பாட்டனுக வரும் வயோதிகர் போன்றூர்களை இன்னும் நமதுநாடு இழந்துவிடவில்லை. அதனுல்தான், இன்னும் நமது பெண்ணினம் முழுதும் கெடவில்லை.

எவ்வளவுதான் நேர்மைவாதியாக இருந்த போதிலும் சொந்த விஷயமென்றூல் அனை வரும், நமது 'ராஜா' நிலைக்குத்தானே வந்து விடுகிறூர்கள்! இதை இளைஞர் உலகம் மாற்ற முற்பட வேண்டும். குறிப்பாக நாம், புது யுகத்தை நாடி முன்னேற வேண்டும். இந்த வழியில் பாடுபட வருபவர்கள் புகழ்ச்சிக்கு அடிமையாகி விடக்கூடாது.

> "புகழ்ச்சியிருக்குதே அதுக்குள்ள போதை வேறு எதுக்குமே கிடை யாது! ஒரு தடவை கேட்கும் போது மனிதன் சந்தோஷப்படு கிறுன். மறுதடவை கேட்கும் போது மயங்கி விடுகிறுன். அப்

புறம் அவனிடத்திலுள்ள அனைத்தையும் கொள்ளையடித்தாலும் அவனுக்குப் புரிவதேயில்லை......''

இது இந்நூலில் வரும் தோட்டி முருகனின் வசனம். பொதுநல ஊழியர்கள் புகழ்ச்சிக்கு அடிமையாகிவிட்டால், மனித சமுதாயம் வேலியற்ற பயிராகிவிடும் என்பது எனது முடிவு. ஆகவே, எனது கருத்துக்களின் முன்னோட்டமாக இந் நாடக நூலை எழுதினேன். இதை, குணச்சித்திர நடிகரான திரு. எஸ். வி. சுப்பையா அவர்கள் பெரும் முயற்சியும் சிரமமும் மேற்கொண்டு, தானும் பங்கேற்று நடித்து கடந்த 1-11-52-ல் விழுப்புரம் விஜயலட்சுமி தியேட்டரில் அரங்கேற்றினார். பார்த்த மக்கள் பாராட்டினார்கள். என் கருத்துச் சிதையாமல் நாடகம் நடத்திக் காட்டிய நடிகர் திரு. எஸ். வி. சுப்பையா அவர்களை நான் மறக்கமுடியாது. அவர்களுக்கு என்றென்றும் என் நன்றி உரித்தாகுக!

புதுயுகத்தைப்போல மிகக் குறுகிய காலத்தில் படவுலகு புகுந்த நாடகம் வேறு எதுவுமில்லை 1-11-52-ல் அரங்கேற்றப்பட்ட புதுயுகம் 3-11-52-ல், பிரபல மியூஸிக் டைரெக்டரான உயர்திரு. ஜி. ராமநாத ஐயர் கண்களில் பட்டது 4-11-52-ல் என்னுடன் பேசி ஒப்பந்தம் செய்துக்கொண்டு, தனது சொந்தப் பொறுப்பில் ஸ்ரீசாயி காலும்ருதா பிக்சர்ஸ் என்று ஒரு படக் கம்பெனியையும் ஆரம்பித்து 9-11-52-ல் சென்னை சியாமளா ஸ்டுடியோவில் ஷூட்டிங்கை தொடங்கி விட்

டார்! இன்று புதுயுகம் படமாக வளர்ந்து முடியும் தருவாயிலிருக்கிறது. என் கதையை நாடகமாக நடித்துக்காட்டிய திரு. சுப்பையா அவர்களைப்போல படமாகத் தயாரித்து வெளியிட முன்வந்த உயர்திரு. ஜி. ராமநாத ஐயர் அவர்களுக்கும் நான் கடமைப்பட்டிருக்கிறேன். அவருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்,

சென்னை
11-2-63

# புதுயுகம்

## காட்சி 1

[புரபஸர் ரெகுநாதன் வீடு. மாலை நேரம்.]

சேகர்:-சார், சார்! [கதவைத் தட்டுகிறான்.]

செல்லம்:-[எட்டிப் பார்க்கிறாள். சேகரைப் பதைப்பார்த்து, தலையை உள்ளே இழுத்துக் கொண்டு] அண்ணா இன்னும் வரவில்லையே!

சேகர்:-வர நேரமாகுமா?

செல்:-வருகிற நேரந்தான், உள்ளே வந்து உட்காருங்களேன்.

[சேகர் வந்து நாற்காலியில் உட்காருகிறான். செல்லம் சமையல் கட்டை நோக்கிச் செல்கிறாள்]

சேகர்:-குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் வேண்டும்.

[செல்லம் உள்ளே சென்று காபி கொண்டுவந்து கொடுக்கிறாள்.

சேகர்:-[காபியை ஒரு வாய் அருந்திவிட்டு] தண்ணீர்க் கேட்டேன், காபியே வந்து விட்டதே!

செல்:-.........

சேகர்:-குழந்தை விநோதனை எங்கே காணோம்?

செல்:-விளையாடச் சென்றிருப்பான்

சேகர்:-வேலைக்காரி?

செல்:-தோட்டத்தில் வேலை செய்துகொண்டிருக்கிறாள்.

சேகர்:-உன்னிடத்திலே ஒன்று சொல்ல வேண்டுமென்பது எனது நீண்டநாள் ஆசை.

செல்:-எதைப்பற்றி?

சேகர்:-இப்பொழுது நாம் நாகரீக உலகத்தில் வாழ்கிறோம். சீர்திருத்தம் பட்டி தொட்டிகளிலெல்லாம் கூடப் பரவி வருகிறது இல்லையா?

செல்:-எனக்கு இதைப்பற்றி ஒன்றும் தெரியாது. அடுப்பிலே காரியம் இருக்கிறது நான் வருகிறேன்.

[போகிறாள்.]

சேகர்:-செல்லம்!

செல்:-[நின்று திரும்பிப் பார்த்து] என்ன வேண்டும்?

சேகர்:-நான் சொல்வதைக் கேட்டுவிட்டுப் போ!

செல்:-நீங்கள் சொல்ல வேண்டியதை எதிரிலிருக்கும் சுவற்றினிடம் சொல்லுங்கள், அது கேட்டுக் கொண்டிருக்கும். [வேகமாக ஹால் கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே செல்கிறாள்.]

சேகர்:-திமிருக்காரி!

புரபஸர் ரெகுநாதன:-[ஹாலில் நுழைந்தவர் சேகர் இருப்பதைப் பார்த்துவிட்டு] சேகர்!

சேகர்:-[எழுந்து கொண்டே] வணக்கம் சார்! உங்களுக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன்.

ரகு:-வந்து நீண்ட நேரம் ஆகிவிட்டதா? இன்று ஒரு முக்கியமான பாடம், வகுப்பை அரை மணி நேரம் அதிகமாக நடத்தும்படி ஆகிவிட்டது, அதுதான் வருவதற்கு காலதாமதம் அதிருக்கட்டும் நீ காபி சாப்பிட்டாயா?

சேகர்:-இப்பொழுதுதான் சாப்பிட்டேன். உங்கள் தங்கை அருமையான காபி கொடுத்தது.

ரகு:-காபி போடறதிலே எங்கள் செல்லத்திற்கு மிஞ்சியது யாருமே இல்லை. செல்லம், செல்லம்!

செல்:-[உள்ளிருந்தபடியே] இதோ வந்துவிட்டேன் அண்ணா.

ரகு:-காபி கொண்டுவாம்மா, இரண்டு டம்ளர்களில் கொண்டு வா.

சேகர்:-எனக்கு வேண்டாம் சார். நான் இப்பொழுது தானே சாப்பிட்டேன்.

[செல்லம் காபி கொண்டு வந்து மேஜைமீது வைத்துவிட்டு வேகமாகத் திரும்புகிறாள்.]

ரகு:-நில்லம்மா, இங்கே நமது சேகர்தானே இருக்கிறான்? அவனிடத்திலா உனக்கு வெட்கம்? சற்று இரு, டம்ளர்களை எடுத்துக்கொண்டு போகலாம்.

செல்:-அடுப்பிலே காரியமிருக்கிறதண்ணா, அப்புறம் வந்து எடுத்துக் கொள்கிறேன். [செல்கிறாள்.]

சேக:-செல்லம் இந்தக் காலத்துப் பெண்ணே அல்ல சார்.

ரகு:-நீ சொல்வது தப்பு சேகர். அவளுடைய துடுக்குத்தனமெல்லாம் கடந்த ஓராண்டுக்குள் எங்கோ மறைந்து விட்டது. அவள் விதவையான பின்பு, யார் எதிரிலும்—ஏன் என் எதிரில்கூட வர வெட்கப்படுகிறாள்.

சேக:-நம் இந்து சமூகத்திலிருந்து விதவைகளின் கொடுமை என்று ஒழியுமோ தெரியவில்லையே சார்.

[வெளியில் விளையாடச் சென்றிருந்த விநோதன் உள்ளே ஓடி வருகிறான். ரெகுநாதனைப் பார்த்ததும், அப்பா என்று அழைத்த வண்ணம ரெகுநாதனின் மேல் விழுந்து புரள்கிறான். ரெகுநாதன் அவனைத் தூக்கி முத்தமிட்டு, காபி சாப்பிடும்படி கூறி அனுப்புகிறார். குழந்தை சந்தோஷ ஆரவாரம் செய்துக்கொண்டு உள்ளே ஓடுகிறான்.]

சேகர்:-குழந்தைகளிடத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதற்கு நீங்கள் ஒரு எடுத்துக்காட்டு சார்.

ரகு:-என்ன செய்வது சேகர்? விநோதன் தாயை இழந்த குழந்தை. நானும் அவனிடத்தில் அன்பு செலுத்தாவிட்டால், பாவம் ஏக்கத்தால் குன்றிவிட மாட்டானா?. தாயை இழந்த விநோதன், கணவனை இழந்த தங்கை செல்லம், இந்த இருவரும் இல்லாவிட்டால், இந்த உபாத்தியாயர் தொழிலை ராஜினாமா செய்துவிட்டு, எப்பொழுதோ துறவியாகச் சென்றிருப்பேன்.

[கலங்கும் கண்களைக் கைக்குட்டையால் துடைத்துக் கொள்கிறார்.] சேகா:-வருந்தாதீர்கள் சார்.

ரகு:-சேகர்! நீ என்ன காரியமாக வந்தாய் என்பதைக் கேட்க மறந்தே விட்டேனே!

சேகர்:-எங்கள் தமிழ் முன்னேற்றச் சங்கத்திலே ஆண்டு விழா. அதிலே "வள்ளுவர் வாய்மை" என்பது பற்றித் தாங்கள் பேச வேண்டும். உங்கள் அனுமதி வாங்கிச் செல்லவே வந்தேன்.

ரகு:- அவசியம் வருகிறேன். நீ காரியதரிசியாக இருக்கும் சங்கத்திற்கு நான் வராதிருக்க முடியுமா?

சேகர்:-[எழுந்து கைகூப்பிக்கொண்டு] ரொம்ப நன்றி! நான் வருகிறேன் சார்.

[ரகுநாதன் வணக்கம் தெரிவித்தபடி, சரி என்று விடை கொடுக்கிறார். அந்த நேரத்தில் டம்ளரை எடுத்துச் செல்ல செல்லம் அங்கே வருகிறாள். தெரு வாயிற்படியை அடைந்த சேகர் திரும்பிப் பார்க்கிறான். உள் நிலைப் படியை தாண்டிக் கொண்டிருந்த செல்லமும் பார்க்கிறாள். இருவர் கண்களும் சந்திக்கின்றன. சட்டையைக் கழட்டி, கோட் ஸ்டாண்டில் மாட்டிக் கொண்டிருக்கிறார் சேகர்.]

## காட்சி 2

[பா. வெ. மீ. ச. க தலைமைக் கடை. பா. வெ. மா. ச. க, கூழத்தில் தங்கக் கவுடும் விபூதிப் பூச்சுமாகக் கணக்குப் பார்த்துக் கொண்டிருக்கிறார். சேகர் பிரவேசிக்கிறான்.]

சேகர் :-வணக்கமுங்க.

ச. க.:-வா சேகர், உட்கார், புரபஸர் என்ன சொன்னார்?

சேகர்.-வருவதாக ஒப்புக்கொண்டு விட்டார், உங்கள் தலைமையென்று நோட்டீஸ் அடிக்கக் கொடுத்து விடுகிறேன்.

ச. க.:-என்னைவிட இன்னும் நல்ல தமிழறிஞர்களா கப் பார்த்துப் போடேன்.

சேகர்:-உங்களைவிட சிறந்த தமிழறிஞர்கள் வேறு யாரிருக்கிறார்கள்? உங்களை நீங்களே தாழ்த்திக் கூறிக் கொள்வது சரியில்லை!

ச. க:-என்னுடைய தமிழறிவு, புராண ஆராய்ச்சியோடு சரி. இந்தக் கால இளைஞர்களுக்குத் தக்கதாற்போல் பேச எனக்கு அவ்வளவாக வராது என்பதற்காகத் தான் யோசிக்கிறேன்.

சேகர்:-உங்களுக்கு அந்தக் கவலை எதற்கு? தாங்கள் சிறந்த செல்வவான். நல்ல தமிழ்ப் பற்றுடையவர். எல்லோரிடத்திலும் கலந்து பழகும் மனப்பான்மை கொண்டவர். உங்கள் தலைமையிலேதான் இந்த விழாவை நடத்த வேண்டுமென்று எங்கள கழக நிர்வாகிகள் தீர்மானித்திருக்கிறார்கள்.

ச. க:-சங்க நிர்வாகிகள் தீர்மானிக்கிறதென்னப்பா, நீ விரும்புகிறாயென்று சொல்!

சேகர்:-அப்படித்தானிருக்கட்டுமே, தவறு என்ன அதில்?

ச. க:-முன்னுக்கு வரவேண்டிய இளைஞன் நீ விரும்புகிறாய், என்றால் மறுத்துரைக்க முடியவில்லை. ஆனால்......

சேகர்:-என்ன ஆனால்?

ச. க.:-நாளைக்கு நான் என்ன பேச வேண்டுமென்பதை, விளக்கமாக ஒரு தாளிலே எழுதிக் கொண்டுவந்து கொடுத்துவிடு, நான் அதை அங்கே படித்து விடுகிறேன்.

சேகர்:-இதென்ன பிரமாதம்? இன்றைக்கு இரவே எழுதிக் கொண்டுவந்து கொடுத்து விடுகிறேன்!

ச. க:-அப்படிச் செய்வதில் தவறு ஒன்றுமில்லையே?

சேகர்:-தவறு என்ன இதிலே? இன்றைய பிரசங்கிகளிலே, பலர் இப்படித்தானே இருக்கிறார்கள்! மேலும் நீங்கள் வியாபாரி, கொடுக்கல் வாங்கல்காரர், தொழிலைக் கவனிக்க முடியுமா, பிரசங்கத்திற்கு விஷயம் சேகரிக்க முடியுமா? இதெல்லாம் காரியதரிசியான என்னுடைய கடமைகளிலே ஒன்றுங்க. அருமையான பிரசங்கமா, ரெடிமேடா, இரவு எட்டு மணிக்குக் கொண்டு வந்து தருகிறேன். நான் வரட்டுமா?

[ச. க. தலையசைத்தபடி கரம் குவிக்கிறார். சேகர் விடைபெற்றுச் செல்கிறான்.]

## காட்சி 3

[தமிழ் முன்னேற்றச் சங்கத்தின் முன்புறம். மேஜை நாற்காலி போடப்பட்டிருக்கின்றன. மைக் வைக்கப்பட்டிருக்கிறது. புரபஸர் ரெகுநாதன், ப. வெ. மா. ச. க., மற்றும்

சில பிரமுகர்களும் அமர்ந்திருக்கின்றனர். பொதுமக்கள் கீழே வீற்றிருக்கிறார்கள். ச. க. பேச எழுந்து நிற்கிறார், அவர் கழுத்திலே சேகர் மாலை போடுகிறான். ஜனங்கள் கரகோஷம் செய்கின்றனர்.]

ச. க.:-மெய்யன்பர்களே! இந்த விழாவிற்கு என்னைத் தலைமை தாங்கச் செய்ததற்கு நன்றி செலுத்துகிறேன். தமிழ் ஒரு பெருங் கடல். அதன் ஆழத்தை முற்றிலும் கண்டு பிடித்தவர்கள் ஒருவருங் கிடையாது. தமிழ் ஆராய்ச்சித் துறையிலே, இந்தச் சங்கம்—குறிப்பாகக் காரியதரிசி சேகர் செய்துவரும் முயற்சி, பாராட்டுதற்குரியது. இன்றைய நிகழ்ச்சிகளில் முக்யமானது, முது பெரும் புலவர்-தமிழ் ஆராய்ச்சி வல்லுநர்—புரபஸர் ரெகுநாதன் அவர்கள் செய்யப்போகும் பிரசங்கமாகும். வள்ளுவரைப் பற்றி நான் படித்திருக்கிறேன். நீங்களும் படித்திருப்பீர்கள். வள்ளுவரின் மேதை நமக்குத் தெரியும். வள்ளுவர் வாய்மை என்பது பற்றி, புரபஸர் பேச இருக்கிறார். என் முன்னுரையில் சுருக்கமாக ஒன்று சொல்கிறேன். வள்ளுவர் வாய்மையில் மிகச் சிறந்தது, ஏழ்மையைப் பற்றிச் சொல்லியிருப்பது. "இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின், பரந்து கெடுக உலகியற்றியான்" என்று சொல்லுகிறார் வள்ளுவர். புரட்சி மணம் கமழும் இந்த வாக்கியத்திற்கு, கோடி கோடியாகக் கொடுத்தாலும் தகும். உலகில், பசியையும் பசியாத் தன்மையையும் மனிதனா உண்டாக்கினன்? பணக்காரர்களையும் ஏழைகளையும் மானிடர்களா சிருஷ்டித்தார்கள்? இல்லை, ஆண்டவன் படைப்பித்தான். அதனால்தான், மனிதன் இரந்து வாழும்

ஏற்பட்டால்—அதாவது பிச்சை யெடுத்து வாழும்படி நேரிட்டால், அப்படி இந்த உலகத்தை இயற்றிய அந்தக் கடவுள், அழிந்து ஒழியட்டும் என்று கடவுளர்க்கே சவால் விடுவது போன்று கூறியிருக்கிறார் வள்ளுவர். இந்த வாய்மை, நெஞ்சாப, [புரபஸரைக் கடைக்கண்ணுல் பார்த்தபடி] இந்தக் காலத்துப்புலவர்களுக்கு வருமா என்று கேட்கிறேன்? இதைப்போன்று இன்னும் பலப்பல விஷயங்களை எடுத்துக் கூறலாம். ஆனால், முக்கியப் பிரசங்கி புரபஸர் ரெகுநாதன் அவர்களானதால், அவர்களின் நேரத்தை நான் கொள்ளை கொள்ள விரும்பவில்லை. வள்ளுவர் வாய்மை என்பதுபற்றி, புரபஸர் ரெகுநாதன் அவர்கள் பேசுவார்கள்.

[ரெகுநாதன் பேச எழுந்திருக்கிறார். அவர் கழுத்திலே பெரிய மலர் மாலையைச் சூட்டுகிறான் சேகர். பொதுமக்கள் கரகோஷம் செய்கின்றனர்.]

ரெகு:-தலைவர் அவர்களே! தமிழ் முன்னேற்றச் சங்க இளைஞர்களே! சகோதரர்களே! உங்கள் அனைவருக்கும் எனது பணிவான வணக்கம் உரித்தாகுக. வள்ளுவர் வாய்மை என்பது பற்றிப் பேச வந்த எனக்கு, இன்றைக்குத் தேவையான வாய்மை எது என்பதைச் செப்பும்படி அடி எடுத்துக் கொடுத்த தலைவருக்கு நன்றி செலுத்துகிறேன். நமக்குத் தமிழார்வம் மட்டும் இருந்தால் போதாது. அறிவும் ஆராய்ச்சியும் வேண்டும். அவை இல்லாதவர்கள், தமிழை அறிந்தவர்கள்போல் சபையில் பேச வந்து விடுகிறார்கள். அவர்களால்தான் நம்மிடமுள்ள கலை தத்துவங்களெல்லாம் நாசமாகின்றன. நூலை இயற்றுபவர்களிடம்

மட்டும் வாய்மை இருந்தால் போதாது. அதைப் பரப்பு வோர்களிடமும் இருக்க வேண்டும். தலைவர் அவர்கள், திருக்குறளிலிருந்து ஒரு செய்யுளை எடுத்து விளக்கினார்கள். அதிலே, வள்ளுவர் கடவுள் ஒழிந்து போகட்டும் என்று சொல்லியிருப்பதாகவும் கூறினார்கள். இது போலிக்கூற்று. மக்களின் கவனத்தை வேறு திசையில் திருப்பிவிடும் ஏமாற்றுவாதம். கடவுள் ஜீவராசிகளைத் திறமைய பொது வாகப் பசியைப் படைத்தார். மனித வர்க்கத்தில் சுய நலம் கொண்ட ஒரு கூட்டம், குபேரயாக பசியில்லாத தன்மையைப் படைத்துக் கொண்டது. உலகத்தை வள முடையதாக ஆண்டவன் படைத்தான். ஒரு கூட்டம் அதைத் தங்களுக்கே சொந்தமுடையதாக்கிக் கொண் டது. பசியில்லாத தன்மை ஒரு பக்கம் வளர்கிறது, இன் னொரு பக்கம் பசியின் கொடுமை வளர்கிறது. வருமான மெல்லாம் ஒரு சிலர் கைகளில் முடங்கிவிட்டால், வறுமை எங்கும் தலைவிரித்தாடுகிறது. சாதாரண மனிதனுக்குப் புரியும் இந்தச் சின்ன விஷயம், வள்ளுவருக்குப் புரியா திருக்க முடியாது. எனவே, வள்ளுவர் பரந்து கெடுக உலகியற்றியான் என்றது ஆண்டவனைக் கூறியதல்ல. தலைவர் போன்றோரைக் கூறியதாகும். இவர்கள் போன் றோரை விட்டு வைத்திருக்கும் அரசாங்கத்திற்குக் கூறிய தாகும். ஆற்றல்மிக்க இளைஞர் சமுதாயத்தில் எடுத்துக் கூறி, அவனை செய்யும்படி தமிழறிஞர்கள் கையில் சமர் பித்ததாகும். வள்ளுவர் வார்த்தைகளுக்கு கடவுளை அழிக்கும் சக்தி இருக்குமானால், அவர் கடவுளைக் கெடுக என்று கூறி யிருக்கமாட்டார். சக்தி படைத்த தனது வாக்குப்பலத்தால், வறுமையைக் கெடுக எனக் கூறி, அதை அழித்துச் சிதைத்

திருப்பார். இன்னும், திருவள்ளுவரை—திருக்குறளை—நாஸ்திக வாதிகளும் ஒப்புக்கொள்கிறார்கள்.' நாஸ்திக வாதத்தின் முடிவு, கடவுள் இல்லையென்பதாகும். தலைவர் கூறியபடி பார்த்தால், வள்ளுவர் கூற்று, இநசதும் கடவுளை அறிக என்று கூறுவதில் முடிகிறது. தலைவர் காட்டும் வள்ளுவரை, இரண்டாம் பட்சமாகத்தான் நாஸ்திக வாதிகள் ஒப்புக் கொள்வார்கள். அறிக்க முடியாத ஒன்றை, அறிக்கக்கூடாத ஒன்றைக் கெடுக என்று சொல்ல, வள்ளுவர் போன்ற மேதைகள் தேவையில்லை. உயர்ந்த லட்சிய வாதிகளின் தத்துவங்களைப் போற்றுகிறோம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். இது தீமையிலும் தீமை! ஒரு வீட்டிலே பசி, இன்னொரு வீட்டிலே பட்டாடோபம்! ஒரு வீட்டிலே அழுகை, மற்றொரு வீட்டிலே கூத்தாட்டம்! இப்படியாக உலகமெங்கும் முரண்பட்டுக் கிடக்கின்றன. இந்த மாறுபாடுகளை என்றுதான் ஒரு புலவர் புறநானூற்றிலே கூறுகிறார். அதைத்தான் வள்ளுவர் கூறுகிறார். அதைத்தான் அதற்குப்பின் தோன்றிய பாரதி கூறினார். மார்க்ஸும் மற்றவர்களும் போதித்திருக்கும் தத்துவமும் இதுதான். வள்ளுவர் வாய்மை என்ற தலைப்பிலே, இன்னும் நீண்ட நேரம் பேசிக்கொண்டே போகலாம். காலம் நீளமாதலால் இத்துடன் முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

[சேகர் காதிலே ச. க. ஏதோ சொல்கிறார். அதைக் கேட்டு விட்டு சேகர் ஒலிபெருக்கியின் முன்பு வந்து]

சேகர்:-தாய்மார்களே! பெரியோர்களே! தலைவர் முடிவுரையில் நீண்ட நேரம் பேசுவதாக இருந்தார். உடல்

நலம் சரியில்லாததால் அவரால் பேசமுடியவில்லை. ஆகவே, கூட்டப இத்துடன் கலைகிறது வந்திருந்தவர்களனைவருக்கும் எங்களின் தமிழ் முன்னேற்றச் சங்கத்தின் சார்பில் நன்றி. வணக்கம்.

## காட்சி 4

[ரெகுநாதன் வீடு. படுக்கை யறை. முன்னிரவு. செலலம் கட்டிலின்மீது படுத்திருக்கிறள். "வறண்ட வாழ்க்கை" என்ற புத்தகம் அவள் கையில் இருக்கிறது. பிரித்து மனதிற்குள் படித்துக்கொண்டிருக்கிறள். உள்ளே நுழைநத குழந்தை விநோதன், ரேடியோவைத் திருகி விடுகிறன்.

"கூடை போட்டுக் கவுத்து வச்சேன்
கொய்யாப் பழத்தை
குழு கமுன்னு வாசத்தாலே கூவி
அழைசசுது—ஊரைக்கூவி அழைச்சுது"

என்ற பாட்டு ஒலிக்கிறது. புத்தகம் படித்துக் கொண்டிருநத செலலத்தைத் தட்டி]

விநோ:-அத்தை! ரேடியோ பாடுது கேள்.

[செல்லம் புரண்டு படுக்கிறள் அவள் கையிலிருக்கும புத்தகத்தைப் பிடுங்கிக்கொண்டு, "படம் பார்க்கப் போகிறேன்" என்று சொல்லிக கொண்டே அறையைவிட்டு ஓடி விடுகிறன விநோதன். ரேடியோவில பாட்டு முடிகிறது. அந்தப் பாட்டு செலலத்தின்

மனோநிலையை பிரதிபலிப்பதுபோல் இருக்கிறது. நீண்ட பெருமூச்சு விடுகிறாள்.]

ரகு:-செல்லம், செல்லம்.

[அழைத்துக்கொண்டே உள்ளே வருகிறார்.]

செல்:-ஏனண்ணா? [என்று கேட்டுக்கொண்டே ஹாலுக்கு வருகிறாள்]

ரகு:-இதோ பாரம்மா, இத்தனை பெரிய ரோஜா மாலையை ஏன் கழுத்திலே போட்டான் சேகர். இன்றைக்குத் தமிழ் முன்னேற்றச் சங்கத்திலே அருமையான பொழிவு நிகழ்த்தினேன். எல்லோரும் எப்படி ரசித்தார் சொற்கள் தெரியுமா? நீதான் வரமாட்டேனென்று சொல்லி விட்டாயே! [மலர் மாலையை செல்லத்தின் கழுத்திலே போடப் போனார் ரகுநாதன]

செல்:-அண்ணா! [என்று அலறியபடி செல்லம் விலகிக் கொள்கிறாள். ஏதோ விபரீதம் அடைந்து விட்டதைப் போன்ற பீதி அடைந்த நிலையில் ரகுநாதன்]

ரகு:-என்னம்மா, ஏன் இப்படி அலறினாய்?

செல்:-[தேம்பியவண்ணம்] மலரையும் மஞ்சளையும், தொடுவதற்குககூட அருகதையற்ற விதவை நானென்று உங்களுக்குத் தெரியாதா அண்ணா? இதைத் தாங்கள் உணர்ந்திருந்தும்......

ரகு:-பைத்தியக்காரப் பெண். எந்த வீணனோ எழுதி வைத்து விட்டுப் போனான் "விதவை மலர்சூடக் கூடா"தென்று. உளுத்துபபோன அந்தச் சப்பிரதாயத்தை,

உன் தமையன் ஒருக்காலும் ஒப்புக்கொள்ள மாட்டான். மாலையணிவது மட்டுமல்லம்மா, மறுமணமே உனக்குச் செய்து வைக்கப் போகிறேன்!

[ரெகுநாதனின் வாயைப் பொத்துகிறாள் செல்லம். அதை அவர் தடுத்துவிட்டு]

ரெகு:-செல்லம்! பசுமை மாறாத இளம்பயிர்நீ. உலகம் இன்னதென்று இன்னும் நீ அறியமாட்டாய்!

செல்:-அண்ணே! வாழ்க்கைத் தோணியில் யாத்திரை செய்யாதவளல்ல நான். நீங்கள் சமுதாயப் புரட்சிக்காரராக இருக்கலாம். தங்கைக்கு மறுமணம் செய்து வைக்க ஆசைப்படலாம். ஆனால், கணவனுடைய புனிதமையைப் பண்டுங்களைத் தகர்க்கல், அந்த எவ்வித சாபமிருக்காது என்பது பெண்கள் கண்ட உண்மை. என் அப்பா, என் பாட்டி, இந்த சமுதாயப் பழைய பெண்கள் எப்படி நடந்தார்களோ, அந்த அடிச்சுவட்டைப் பின்பற்றி நடக்க நினைப்பவள் நான். என்னைத் தங்கையாக எண்ணினால் அண்ணே, என் போக்கிலேயே விட்டுவிடுங்கள் [கீழே குனிந்து அவர் பாதங்களைத் தொட்டு கண்களில் வைத்துக் கொள்கிறாள்.]

ரெகு:-[செல்லத்தைத் தூக்கி] இதோ பார் செல்லம், நான் சொல்வதை ஆத்திரப்படாமல் கேள். உணர்ச்சிகளை உறுதி மொழியினால் தடுத்துவிட முடியாது. பருவம் ஒரு பயங்கரக் காட்டாறு. எந்த நேரத்தில், எப்படிப் பெருக்கெடுக்குமென்று; எவராலும் அளவிட்டுக் கூற முடியாது. நான் மானத்திற்கஞ்சியவன். மானம் போன பின்பு வாழ விரும்பாதவன். விதவையான உன்னைத் திருமணம்

செய்துக்கொடுத்து விட்டால், ஊரில் ஒரு சிலர்தான் என்னை ஏசுவார்கள். தவிர்க்க முடியாத சூழ்நிலையில் நீ தவறு செய்துவிட்டால்?...... இறப்பதைத் தவிர வேறு எனக்கு வழி கிடையாது! சேகர் இளைஞன், உனக்குப் பால்ய சிநேகிதன், அவன் உன்னை விரும்புகிறான், உன் நெஞ்சிலும் சேகரின் உருவம் பதியவில்லை என்று உன்னால் சொல்ல முடியாது. ஆகவே, அவனுக்குன்னை மறுமணம் செய்து வைக்கிறேன், மகிழ்ச்சியுடன் வாழ்க்கை நடத்தலாம்.

செல்:-அண்ணா! நீங்கள் எனக்குத் தமையன் மட்டுமல்ல, தந்தை, தாய், சகலமும் நீங்களென்று உங்களைப் பூஜிக்கிறேன். அந்தப் பூஜையின்மீது ஆணையிட்டுக் கூறுகிறேன், உங்கள் தங்கை தவறு செய்ய மாட்டாள். தவறித் தவறு செய்துவிட்டால், சமுத்திரம் முழுக்கால் அளவு என்பதும் அவளுக்குத் தெரியும்.

சேது:-மன்னிக்க வேண்டும் தாயே. உன் சபதம் வெல்ல உன்னை நான் வாழ்த்துகிறேன். ஆனால் ஒன்று நினைவில் வைத்துக் கொள். உயிர் உனக்குத் துச்சமாகத் தோன்றலாம். உன்னை நம்பி விதிநாதன் என்ற இளம் ஜீவன் சுற்றிக் கொண்டிருக்கிறது. அந்தப் பச்சை மண்ணின் எதிர்காலம் உன் கையில் தானிருக்கிறது. பருவத்துடன் போராடு, தோற்றுவிட மாட்டேனென்கிறாய்; தவறித் தோற்றுவிட்டால், சமுத்திரம் முழுங்கால் அளவு என்கிறாயே, அதை மட்டும் விட்டு விடு! போம்மா போய்ப் படுத்துக் கொள்.

[மாடிப் படி வழியே ஏறிச் செல்கிறார் சேது நாதன். நிர்மலமான வானத்திலே சந்திரன்

எங்கோ சென்றுகொண்டிருக்கிறது: வெறித்த படி அதைப் பார்த்து நிற்கிறார். செல்லம் படுக்கையில் சென்று படுத்தாள் சற்று முன் பாடிய ரேடியோ பாட்டு மீண்டும் ஒலித்தது. அவள் குப்புறப்படுத்து விசித்து விசித்து அழுதுக் கொண்டிருந்தாள்.

## காட்சி 5

[தவணைக் கடை. ச. க. உள்ளே அப்படியும் இப்படியுமாக நடந்துக் கொண்டிருக்கிறார். எதிரே இருக்கும் நிலைக் கண்ணாடியில உருவத்தைப் பார்த்துப் பேசுகிறார்.]

ச. க.:-சாதாரண ஒரு தமிழ்ப் புலவன், வயிற்றுப் பிழைப்பிற்காகத் தன கல்வியை விற்றுப் பிழைக்கும் வறிஞன், சபையிலே என்னை அவமானப்படுத்தி விட்டான்! குடியிருக்க ஒரு வீடும், குடிக்கக் கஞ்சிக்கு ஒரு உத்தியோகமும் இருக்கிறதென்ற திமிர், அவனை அப்படிப் பேசச் செய்தது! அவனை ஒழித்துக் கட்டாத வரையிலும் நான் உறங்கப் போவதில்லை.

[சேகர் வந்து வணங்குகிறான்.]

ச க.:-வாப்பா சேகர். புரபஸர் சௌக்கியமா? என்ன சொலகிறார் நம்மைப்பற்றி?

சேகர்:-நேற்று நடந்த நிகழ்ச்சிக்கு நான் மிகவும் வருந்துகிறேன். நீங்கள் கடைசியில் நடந்துக்கொண்ட பெருந்தன்மைக்குப் பாராட்டாதவர்களே இல்லை.

ச. க.:-பெருந்தன்மையாவது மண்ணாங் கட்டியாவது? அவன் பேசியதைக் கேட்டு மக்கள் வெறி பிடித்தவர்கள் போல் ஆகி இருந்தார்கள்! மேற்கொண்டு நான் பேசி யிருந்தால் என்னைக் கல்லால் அடித்திருப்பார்கள்! ரோட் டில் நடந்து செல்லவே எனக்குப் பயமாகயிருக்கு.

சேகர்:-இதற்கெல்லாம் பயந்தால் ஆகுமா? மக்கள் ஆவேசமிருந்தப் பேச்சைக் கேட்கும் பொழுது உணர்ச்சி கொள்கிறார்கள், கரகோஷம் செய்து ஆரவாரிக்கிறார்கள், கூட்டத்தைவிட்டு கலைந்து செல்லும் பொழுது, அத்தனையை யும் மறந்து விடுகிறார்கள். இல்லையென்றால், எத்தனையோ ஆண்டுகளாக, எவ்வளவோ அரசியல் தலைவர்கள், காடியாகக் கத்தியும் இன்னும் நம் நாடு இந்த நிலையிலிருக்குமா?

ச. க.:-இது மிக புத்திசாலித்தனமான பேச்சு. சில அன்னக்காவடிகளுக்கு, என் போன்ற சிலரிடம் பண மிருப்பது பொறாமையாக இருக்கிறது. பொதுமக்களைத் தூண்டிவிட்டு, ஏதேனும் செய்ய வேண்டுமென்று பார்க் கிறார்கள்.

சேகர்:-ஏழை பேச்சு அம்பலம் ஏறப் போவதில்லை. அவர்கள் பாட்டிற்குக் கத்திக்கொண்டே போக வேண் டியதுதான், உள்ளத்திலிருந்து எதையும் மாற்ற முடியாது. உதாரணத்திற்கு என்னையே எடுத்துக் கொள்ளுங்களேன். கல்லூரியில் படித்தேன், கழகங்கள் அமைத்தேன், லட் சியம் லட்சியமென்று கத்தினேன், உதவி செய்வார் ஒருவரைக்கூடக் காணோம்! ஒரு வேளைச் சோற்றுக்குக் கூடத் திண்டாட்டம்!

ச. க.:-உத்தியோகத்திற்காகப் பல முயற்சிகள் செய்துக் கொண்டிருந்தாயே, அது என்ன ஆயிற்று?

சேகர்:-எல்லாம் அட்டர் பெய்லியர்! முற்றிலும் தோல்வி.

ச. க.:-இதற்காகத்தான் அப்பொழுதே சொன்னேன், சொந்தத்தில் ஏதாவது தொழில் செய்யென்று.

சேகர்:-உங்கள் பேச்சைக் கேட்காததினை தவறை நன்றாக உணர்கிறேன்! இப்பொழுதுகூட அதற்காகத் தான் உங்களிடம் வந்தேன். நீங்கள் ஏதாவது உதவி செய்தால், சொந்தத்தில் தொழில் ஆரம்பித்து நடத்தலா மென்று நினைக்கிறேன்.

ச. க.:-[சிறிது நேரம் ஆலோசனை செய்துவிட்டு] பணம் தருவதைப்பற்றி ஆக்ஷேபனை இல்லை, ஆனால்?......

சேகர்:-ஆனால் என்ன?

ச. க.:-பெறுமானமுள்ளவர்கள் எழுதிக் கொடுக்க வேண்டும்.

சேகர்:-உங்களைத் தவிர வேறு யாரையும் எனக்கு அவ்வளவாகத் தெரியாதே சார்.

ச. க.:-புரபஸர் ரெகுநாதன் உனக்கு ரொம்பவும் வேண்டியவராயிற்றே?

சேகர்:-ஆம்.

ச. க.:-அவரை எழுதிக் கொடுக்கச்சொல்லு போதும். உனக்கு வேண்டிய பணம் தருகிறேன்.

சேகர்:-இது நடக்கக்கூடிய காரியம், முயற்சி செய்து பார்க்கிறேன்.

ச. க.:-புறப்படு, உடனே போய்ப் பார்.

சேகர்:-வருகிறேன் சார், வணக்கம்.

ச. க.:-வெற்றியுடன் திரும்பி வா! [சேகர் சென்ற பின்] சேகர் நான் வீசியிருக்கும் தூண்டிற் புழு! ஆசை வெறியுடன் செல்கிறான், அதில் ரெகுநாதன் சிக்காமல் தப்பவே முடியாது!

## காட்சி 6

[கல்லூரி நூல் நிலையம், மாலை நேரம். புரபஸர் ரெகுநாதன், ஒரு நாற்காலியில் அமர்ந்து பெரிய புஸ்தகம் ஒன்றைப் படித்துக் கொண்டிருக்கிறார். சேகர் வருகிறான்.]

சேகர்:-வணக்கம் சார்.

ரெகு:-[நிமிர்ந்து பார்த்து] சேகரா? வா, இப்படி உட்கார். [அருகிலிருந்த நாற்காலியில் சேகர் உட்காருகிறான்.] நேற்று உங்கள் சங்கத்தில் ஒரேயடியாகப்புகழ்ந்து விட்டாயே என்னை.

சேகர்:-நான் ஒன்றும் தகுதிக்கு மிஞ்சிப் புகழவில்லையே சார். சொல்லப் போனால், தங்கள் தகுதியில் ஒரு பகுதியைக்கூட விளக்கவில்லையே! மேலும்......

ரெகு:-போதுமப்பா. இந்தப் புகழ்ச்சி ஆடம்பரம் இவைகளெல்லாம் எனக்குத் துளிகூடப் பிடிப்பதில்லை. நேற்று எனக்குப் போட்டாயே மாலை, அது பத்து ரூபாய் இருக்குமா?

சேகர்:-ரூபாய் இருக்கட்டும் சார், அன்புதானே பெரிது?

ரெகு:-என்மேல் உனக்குள்ள அன்பினால், நேற்று அங்கே புகழ்ந்தது போதாதென்று, நேரில் பார்த்துப் பாராட்டிப் போக, இப்போ இங்கே வந்திருக்கிறாய், இல்லையா?

சேகர்:-தகுதியுடையவர்களை எங்கே எத்தனை முறை வேண்டுமானாலும் புகழலாம். நேற்று நீங்கள் பேசியது சிறந்த அறிவுரைகள் சார். உங்களை நேரில் சந்தித்து இதைச் சொல்ல வேண்டும் என்று என் இதயம் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தது. அத்துடன் என் சொந்த வேலைக்காகவும் உங்களைப் பார்க்கலாமென்று வந்தேன்.

ரெகு:-சொந்த வேலையா? என்ன செய்ய வேண்டும் சொல், என்னால் இயன்றதை என்றும் உனக்குச் செய்யக் காத்திருக்கிறேன்.

சேகர்:-கல்லூரிப் படிப்பு முடிந்த பிறகு, நான் வேலைக்காக அலையாத இடமே இல்லை! எல்லாம் வியர்த்தமாகவே முடிந்தது.

ரெகு:-இப்பொழுது எங்கேயேனும் வேலைகாலி இருக்கிறதா? அதற்கு நான் சிபாரிசு லெட்டர்த் தர வேண்டுமா? இந்த ஏழை ஆசிரியனின் கடிதத்தை மதித்து, யாரேனும் உனக்கு வேலைதரத் தயாராக இருக்கிறார்களென்றால் சொல், ஆயிரம் சிபாரிசுக் கடிதங்கள் வேண்டுமானாலும் எழுதித் தருகிறேன்.

சேகர்:-நான் வேலை பார்க்கும் முயற்சியை விட்டு விட்டேன் சார், எனக்குச் சிபாரிசுக் கடிதங்கள் தேவையில்லை!

ரெகு:-பின்னென்ன, ஏதேனும் இலக்கியச் சந்தேகமா? விளக்க உரை வேண்டுமா?

சேகர்:-அதெல்லாம் ஒன்றுமில்லை சார். நான் சொந்தத்தில் ஒரு பிஸ்னஸ் செய்யலாமென்று நினைக்கிறேன், அதற்குத் தங்கள் ஒத்தாசை தேவை.

ரெகு:-வியாபாரமா, என்ன வியாபாரம்? அதற்கு நானென்ன செய்ய வேண்டும்?

சேக:-நம்ம ஊரிலே, பேன்ஸி கூட்ஸ் ஷாப் ஒன்று ஒப்பன் பண்ணலாமென்று நினைக்கிறேன்.

ரெகு:-பேன்ஸி கூட்ஸ் ஷாப்பா? அதாவது நவநாகரீகச் சாமான் விற்பனைக் கடையா? நல்ல வியாபாரம், நிறைய விற்பனையாகும்! உதாரணமாக, உணவுப் பொருளான கோதுமை மாவு ஒரு மூட்டை விற்கும் ஒரு நகரத்திலே, ஒன்றரை மூட்டை அளவு பேஸ் பவுடர் விற்கிறது. நூறு ராத்தல் ரொட்டி விற்கும் டவுனிலே, நூற்றைம்பது ராத்தல் வாசனைச் சோப்பு விற்பனையாகிறது. ஐந்து ரூபாய்க்கு நல்லெண்ணெய் விற்கிறதென்றால், ஐம்பது ரூபாய்க்குச் சென்ட்டு விற்கிறது. இதைப்போலவே மற்றெல்லாப் பொருள்களும். அவசியமான பொருள்களைவிட்டுவிட்டு, ஆடம்பரப் பொருள்களை வாங்கிக் குவிக்கும இந்தக் காலத்திலே, நீ செய்ய நினைக்கும் தொழில் மிகமிக லாபகரமானது. வரவேற்கிறேன் உனது வர்த்தக நுணுக்கத்தை! ஆனால், அதற்கு வேண்டிய மூலதனம்?

சேகர்:-அதற்காகத்தான் சார் உங்களிடம் வந்தேன்.

ரெகு:-[சிரித்துக்கொண்டே] நல்ல இடந்தேடி வந்தாயப்பா? என்னிடத்தில் நல்ல மனமிருக்கிறது. அது

நிறைய அன்புமிருக்கிறது. ஆனால், அது பணமாகாதே யப்பா. உனக்கு வேண்டுமென்பது பணம். அதுவும் ஒன்றி, ரண்டல்ல, ஆயிரக்கணக்கில் தேவைப்படுமே!"

சேகர்:-நல்ல மனமுள்ளவர்கள் நாடினால் எதையும் செய்யலாம் சார். பணம் வைத்திருப்பவர்களில் பலர் எனக்கு வேண்டியவர்கள். ஆனால், அவர்களுக்கு உங்களைப் போன்று நல்ல மனமில்லை. யாரும் எனக்கு உதவி செய்ய மறுத்து விட்டனர். கடைசியாக உங்களிடம் வந்தேன். எனக்குத் தெரிந்த நவுனைக் கடைக்காரரொருவர் பெறு மானமுள்ள சொத்து அடகு வைத்தால், தேவையான பணம் தருகிறேனென்கிறார். உங்கள் வீட்டை அடகு வைத்தால்......

ரெகு:-ஆட்சேபனையில்லை. நீ மோசஞ் செய்துவிட மாட்டாய் என்று எனக்குத் தெரியும். பத்திரமெழுதிக் கொண்டுவா, கையெழுத்துப் போட்டுத் தருகிறேன்.

சேகர்:-நல்லது சார், நான் போய்வருகிறேன். இந்த நன்றியை என்றுமே மறக்க மாட்டேன்.

ரெகு:-நன்றியுரைதேவையில்லையப்பா, போய் வா!

## காட்சி 7

[ரெகுநாதன் வீடு. ஹாலில் மாட்டப்பட்டிருக் கும் படங்களுக்குத் தூசி துடைத்துக்கொண் டிருக்கிறாள் செல்லம். வினோதன் கையில் ஒரு சினிமா நோட்டீஸுடன் ஓடி வருகிறான்.]

வினோ:-அத்தே! இதோ பார் சினிமாநோட்டீஸ். நாம சினிமா பார்க்கப் போகலாமா?

செல்:-[சினிமாநோட்டீஸை வாங்கிப்பார்த்து விட்டு] இந்தப் படத்திற்கு வேண்டாங்கண்ணு, இன்னொரு நாளைக்குப் போகலாம்.

விநோ:-அதெல்லாம் முடியாது. இந்தப் படத்துக்குத் தான் போகணும்.

செல்:-நான் சொல்றதைக் கேளுப்பா. இது இங்கிலீஷ் படம், உனக்கு ஒண்ணும் புரியாது. தமிழ்ப் படம் வரட்டும் அழைச்சுகிட்டுப் போறேன்.

விநோ:-நீ பொய் சொல்றே, அண்ணைக்கு அப்பாக்கூட இங்கிலீஷ்படம் பாத்தேன், எல்லாம் புரிஞ்சுதே.

[ரெகுநாதன் வெளியிலிருந்து வீட்டிற்குள் வருகிறார்.]

ரெகு:-என்னடா புரிஞ்சுது ?

விநோ:-[ரெகுநாதனை வந்து கட்டிக்கொண்டு] அப்பா, அத்தை என்னை சினிமாவுக்கு கூட்டிக்கிட்டுப்போக மாட்டேங்குது. அம்மா இருந்தா தினம் அழைச்சிக்கிட்டுப் போவாங்கல்ல? [கண்ணைக் கசக்குகிறான்.]

ரெகு:-[அவனைத் தூக்கிக்கொண்டு] ஏம்மா குழந்தையை அழவிடுகிறாய்? அழைத்துக்கொண்டு போய் வாயேன்.

செல்:-இங்கிலீஷ் படமண்ணா. அவனுக்கும், எனக்கும் என்ன புரியும் அதிலே?

ரெகு:-புரியுதோ புரியவில்லையோ, பிள்ளையை அழவிடலாமா? நானும் வருகிறேன், நாமெல்லோரும் இன்றைக்குச் சினிமாவுக்குப் போய் வரலாம்.

செல்:-சரியண்ணா! காபி சாப்பிட வாங்க.

[செல்லம் முன் நடக்க, விநோதனைத் தூக்கிக் கொண்டு ரகுநாதன் உள்ளே செல்கிறார்.]

## காட்சி 8

[சினிமாத் தியேட்டர் முன்புறம், இரவு நேரம். செல்லம் பெண்கள் பகுதியிலிருந்து தலையைப் பிடித்துக்கொண்டு வெளியே வருகிறாள். சேகர் ஆண்கள் பகுதியிலிருந்து வெளியே வருகிறான். அவன் வாயில் சிகரெட் புகைந்துக் கொண்டிருக்கிறது.]

செல்:-[தலையைப் பிடித்திருக்கும் கையை எடுத்துக்கொண்டு] அப்பா!

சேகர்:-[செல்லத்தின் கிட்ட நெருங்கி] ஏன் செல்லம், தலை நோகிறதா?

செல்:-[அவனைப் பார்த்து ஆச்சரியமடைந்தவளாக] தாங்கள்!......

சேகர்:-உன்னைப்போல் படம்பார்க்கத்தான் வந்தேன். ஆனால், படம் பிடிக்கவில்லை. அதனால்தான் எழுந்து வந்து விட்டேன்.

செல்:-ஒரே ஆபாசக் காட்சி! இதை எப்படித்தான் அருவருப்பின்றிப் பார்க்கிறார்களோ?

சேகர்:-படம் பார்ப்பவர்கள் மேல் உனக்கு இவ்வளவு ஆத்திரம் வருகிறதே, இந்த ஆபாசக் காட்சியைத் தத்ரூப

மாக நடித்திருக்கிறார்களே, அவர்களைப் பார்த்தால் என்ன சொல்வாயோ?

செல்:- அவர்கள் நடிகர்கள், அதிலும் மேனாட்டுக்காரர்கள். ஆனால், மானாபிமானத்தைவிட்டு இதையும் பார்க்க வருகிறார்களே நம்மவர்கள்? அவர்களைத்தான் சொல்ல வேண்டும்.

சேகர்:- அப்படியானால் நீ மேலே படம் பார்க்கப்போவதில்லையா?

செல:- இல்லை, நான் வீட்டிற்குப் போகிறேன்.

சேகர்:- நீ தனியாகவா வந்தாய்?

செல்:- அண்ணாவுடன்தான் வந்தேன். அவர் ஆண்கள் பகுதியிலே அமர்ந்திருக்கிறார். நீங்களவரைப்பார்த்து, நான் வீட்டுக்குப் போய் விட்டதாகச் சொல்லி விடுங்கள்.

சேகர்:- குழந்தை விநோதன்?

செல்:- அவனும் அவருடன்தானிருக்கிறான், நான் வருகிறேன்.

சேகர்:- நில் செல்லம், நீதனியாகவா போவாய்? நான் உன்னைக்கொண்டுவந்து விட்டுவிட்டுத் திரும்புகிறேன்.

செல்:- உங்கள் கருணைக்கு நன்றி. அன்னிய ஆடவரை, ஒரு அமங்கலை துணைக்கழைத்துச் செல்வதைவிட, தனியே செல்வதில் அதிக ஆபத்து நேர்ந்துவிடாது, நான் வருகிறேன்.

[செல்லம் செல்கிறாள். சேகர் சிகரெட் புகையை ஊதியவண்ணம் சிந்தனை செய்து நிற்கிறான்.

பிறகு ஒரு முடிவிற்கு வந்தவனாக் திரையட்
ரவிட்டு வெளியேறுகிறான்.]

## காட்சி 9

[ரெகுநாதன் வீடு, நள்ளிரவு. வாசலில் வண்டி வந்து நிற்கிறது. செல்லம் இறங்கி உள்ளே சென்று படுக்கையில் தொப்பென்று விழுகிறாள். சிறிது நேரத்தில் அவள் மெல்லுடலை ஒரு கரம் தீண்டுகிறது. விழித்துப் பார்க்கிறாள். சேகர் நின்றுக் கொண்டிருக்கிறான்.]

செல்:-தாங்களா?

சேகர்:-ஏன் பயப்படுகிறாய்?

செல்:-பயமா? உங்களிடத்திலா? ஹூம், நல்ல வேடிக்கை!

சேகர்:-ஆச்சர்யமடைந்ததுபோல் தாங்களா என்று கேட்டாயே?

செல்:-உங்கள் செய்கையில், என்றுமே நான் ஆச்சர்யமடைந்ததில்லையே?

சேகர்:-அடையமுடியாது, ஏனென்றால் நான் உன் உயிர் நண்பன்!

[சேகர் அவள் பக்கத்தில் அமர்கிறான். செல்லம் படுக்கையை விட்டு எட்ட விலகிக் கொண்டு]

செல்:-நீங்கள் இந்த அறையைவிட்டு இப்பொழுதே வெளியேற வேண்டும்.

சேகர்:-செல்லம், என்னைப் பார். ஏன் இப்படி ஆத்திரமடைகிறாய்?

செல்:-ஆத்திரமடையவில்லை. அன்பாகத்தான் சொல்லுகிறேன். தயவுசெய்து வெளியே போய் விடுங்கள்.

[சேகர் செல்லத்தை நெருங்கிக்கொண்டே]

சேகர்:-தென்றலை விரும்பாத முல்லையை நான் பார்த்ததே இல்லை.

செல்:-சிந்தனையற்ற பேச்சுக்கு நானும் செவி சாய்ப்பதில்லை.

சேகர்:-செல்லம்! என்னைப்பார்த்துச் சொல். எது சிந்தனையற்ற பேச்சு? சின்னஞ் சிறுபிராயத்தில், சேர்ந்து விளையாடும்போது; மணல்வீடுகட்டி, அந்தபனைக்கு நீ நாயகியாகி, என்னை நாயகனாக இருக்க வேண்டுமென்று தினமும் கேட்டுக் கொள்வாயே, அது சிந்தனையற்ற பேச்சா? பருவமடைந்த பிறகுங்கூட, பலமுறை எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறாயே "நான்தான் உன் வாழ்க்கையின் ஜீவ"னென்று. அவையெல்லாம் சிந்தனையற்ற செயல்கள்தானா? விதி என்னிடமிருந்து உன்னைப் பிரித்தது. அந்த விதியே மீண்டும் நம்மைச் சேர்த்து வைக்கிறது. மறுத்துரைப்பது மடமை செல்லம், நான் சொல்வதைக் கேள்.

செல்:-மாதத்தில் ஒரு முறைதான் பௌர்ணமி வரும், மங்கையரின் வாழ்க்கையில் மாங்கல்யம் தரிப்பதும் ஒரே முறைதான்.

சேகர்:-சில மாதங்களுக்கு இரண்டு பௌர்ணமிகளைச் சந்திக்கும்படியான அதிர்ஷ்டமும் ஏற்படுவதுண்டு செல்லம்.

செல்:-அதற்குப் பெயர் அதிர்ஷ்டமல்ல, அசம்பாவிதம்.

சேகர்:-எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள். உன் வாழ்க்கையில் என்றும் ஒளி வீசும் பூரணச் சந்திரனாக இருக்க விரும்புகிறேன். உன் தமையன் ஒப்புகிறார். உன் மனம் ஒப்புகிறது. இன்றைய உலகமும் இதை வரவேற்கிறது. வீணாக ஏன் பிடிவாதம் பிடிக்கிறாய்? உன் ஆசைக் காதலனை சேகர், அன்பு மணாளனாகி, இப்பொழுது நாம் பார்த்தோமே சினிமா? அதில் வரும் காதலர்களைப்போல, வற்றாத இன்பத்தின் மத்தியிலே நாம் வாழ வேண்டும். மறைக்காமல் சொல் செல்லம். சினிமாக் கொட்டகைக்குள் போய் அமர்ந்ததும், எத்தனை முறை நீ என்னைப் பார்த்தாய்? அந்தப் பார்வையெல்லாம் வீண் அர்த்தமற்றதா? இல்லையென்றால் என்னை ஏன் வருத்துகிறாய்? என் தலையிலடித்துச் சொல் என்மீது உனக்கு ஆசை இல்லை என்று. நான் இப்படியே வெளியேறி விடுகிறேன்.

[கரத்தைப் பற்றுகிறான். பேசாதிருக்கிறாள் செல்லம். அவள் தலையை தடவிக்கொடுத்துக் கொண்டே]

சேகர்:-செல்லம், இனி நீதான் என் வாழ்க்கையின் ஜீவன்.

[எலக்ட்ரிக் லைட் அணைகிறது. படுக்கையறை விளக்கு எரிந்துக் கொண்டிருக்கிறது. அந்த

வெளிச்சத்திலே அறையில் மாட்டப்பட்டிருக்கும் படம் ஒன்று தெரிகிறது. அது ஆங்கில நாட்டுப் படம். அதில் காதலரிருவர் முத்தமிட்டுக் கொள்ளும் தோற்றம் காட்சியளிக்கிறது.]

## காட்சி 10.

[சேகர் அறை, காலை நேரம். சேகர் ரேடியோவைத் திருகி விடுகிறான். இன்பகரமான பாட்டு ஒலிக்கிறது. அந்தப் பாட்டிற்கு ஏற்றாப்போல் 'கிட்டி' யடித்துக்கொண்டு, உடையணிந்து தலைவாரிக் கொள்கிறான். அலங்காரம் முடிந்ததும், நாற்காலியில் அமர்ந்து கடிகாரத்தைப் பார்ப்பதும், காலம் விரைந்து செல்லாததற்காக அங்கலாய்ப்பதுமாகயிருக்கிறான்.]

## காட்சி 11

[ரெகுநாதன் வீட்டு மாடியறை. ரெகுநாதன் சோபாவில் அமர்ந்து ஏதோ படித்துக் கொண்டிருக்கிறார்.]

செல்:-அண்ணா! மணி ஒன்பதாகப் போகிறதே கல்லூரிக்குப் போகவில்லையா?

ரெகு:-படிப்பில் ஆழ்ந்து விட்டேனம்மா, நேரம் போனதே தெரியவில்லை.

[ரெகுநாதன் புறப்படத் தயாராகிறார். செல்லம் கோட்டெடுத்து வந்து கொடுக்கிறாள். அணிந்துகொண்டு புறப்படுகிறார் ரெகுநாதன். அவர் சென்றதும், "வருவார் என் ராஜா" என்று ஆடிப் பாடுகிறாள் செல்லம். பாட்டு முடிகிறது. வாசலில் வந்து எட்டிப்

செல்:-எங்கே இன்னும் வரக் காணோம்?

[என்று கூறிக்கொண்டு, கண்ணாடியின் முன்பு போய் நின்று, தன்னைச் சரிப்படுத்திக் கொள்கிறாள். மெதுவாக உள்ளே நுழைந்த சேகர், அவள் பின்புறமாக, சேர்ந்தாற்போல் போய் நிற்கிறான். இருவர் உருவங்களும் கண்ணாடியில் தெரிகின்றன.]

செல்:-என் உருவத்தோடு அவர் உருவத்தையும் சேர்த்துக் காட்டும் கண்ணாடியே! உனக்குத் திறமை இருக்குமானால், என்னோடு தெரியும் உருவத்தைப் பேசச் சொல் பார்க்கலாம்.

சேகர்:-செல்லம்!

செல்லம்:-இது திமிர்ப்பிடித்தப் பேச்சு. என்னை அவர் இப்படி அதிகாரத் தொனியில் கூப்பிடவே மாட்டார்.

சேகர்:-கண்ணே செல்லம்!

செல்:-இது பெண்களை ஏமாற்றும் வார்த்தை. இப்படியும் அவர் அழைக்க மாட்டார்.

சேகர்:-பின்னே எப்படி அழைப்பர்?

செல்:-கண்ணுடியில் தெரியும் உருவத்திற்கு கற்பனை வருமா? நிஜ உருவமாக இருந்தால் தெரியும்!

[சேகர் அவள் முன்புறமாகவந்து, அவள் தோள்களைப் பிடித்து குலுக்கி]

சேகர்:-எப்படி அழைப்பதென்று கற்றுக் கொடு.

செல்:-கற்றுத் தராவிட்டால்?

சேகர்:-கன்னஞ் சிவந்துவிடும்!

செல்:-அடித்தா?

சேகர்:-அடித்தோ அணைத்தோ, அதை ஏன் கேட்கிறுய்?

செல்:-அடிப்பதும் அணைப்பதும் ஒன்றுதாளு உங்களுக்கு?

சேகர்:-வம்புப் பேச்சுப் பேச நான் இங்கே வரவில்லை.

செல்:-பின்னென்ன வக்கீல் வாதம் புரிய வந்தீர்களா?

சேகர்:-இந்தக் குறும்புத்தனத்தை இத்தனை நாளும் எப்படி மறந்திருந்தாய் செல்லம்?

[அவள் கரத்தைப் பற்றுகிறுன். அவள் திமிறிக்கொண்டு]

செல்:-வாருங்கள் சொல்கிறேன் [என்று கூறிக் கொண்டே ஓடுகிறுள்.]

## காட்சி 11A

[ரெகுநாதன் வீட்டு ஹால். ஊஞ்சலில் சேகர் செல்லம் அமர்ந்து ஒய்யாரமாக ஆடிப் பாடுகின்றனர். பாட்டு முடிந்ததும்]

செல்:-இப்படியே எத்தனை நாளைக் கழிக்கப் போகிறீர்கள் ?

சேகர்:-என் ஆயுள் பூராவும்.

செல்:-அரட்டை வேண்டாம், விஷயத்தோடு பேசுங்கள்.

சேகர்:-எஜமானி உத்தரவு.

செல்:-சொல்லுங்கள், அண்ணாவிடம் சொல்லி முகூர்த்தத்திற்கு நாள் பார்க்கச் சொல்லட்டுமா?

சேகர்:-நாளாவது நக்ஷத்திரமாவது? நாள் பார்த்துக் கொண்டா நாம் ஒன்றுபட்டோம்?

செல்:-அப்படியானால், நாளைக்கே முகூர்த்தத்திற்கு ஏற்பாடு செய்யச் சொல்லட்டுமா?

சேகர்:-அவசரப்படாதே, எல்லாம்எனக்குத்தெரியும்!

செல்:-என்ன உங்களுக்குத் தெரியும்? நான் விதவை. அடங்கி ஒடுங்கி அடுப்பங் கரையிலே கிடக்க வேண்டிய என் இதயத்திலே ஆசைத்தீயை மூட்டிவிட்டீர்கள். உறுதியோடு உள்ளத்தைக்கட்டுப்படுத்த ஓராயிரம் தடவை முயன்றிருப்பேன், முடியவில்லை. முடிவில் நீங்களே வெற்றி பெற்றீர்கள். பூமியை விலை பேசிய பிறகு, சாஸனம் எழுதும் காலத்தை எந்த புத்திசாலியும் தள்ளிக்கொண்டுப் போக மாட்டான். தவிப்பும் சங்கடமும் எனக்கு, சந்தோஷம் உங்களுக்கு. திருமணத்தை அண்ணா ஒப்புகிறாரோ தவிர, திருமணத்திற்கு முன்பு நாம் செய்திருக்கும் தீச்செயலை அண்ணா ஒருபோதும் விரும்பமாட்டார். அவர் நம் அடாத செயலை அறிந்துக் கொள்வதற்கு முன்பே......

சேகர்:-பிரசங்கம் போதும் செல்லம், நான் பித்த னல்ல, ஏதை எப்பொழுது செய்யவேண்டுமென்பது எனக் குத் தெரியும். கவலைப்படாதே நான் வருகிறேன்.

செல்:-அதற்குள் என்ன அவசரம்?

சேகர்:-கடைக்குப் போக வேண்டாமா? புதிய வியா பாரம், உடையவனில்லாவிட்டால் ஒன்றுமே நடக்காது, வரட்டுமா?

[செல்லம் தலைகுனிந்து நிற்கிருள். சேகர் வெளியேறிச் செல்கிருன். சோகக் கீதம் ஒலிக்கிறது.]

## காட்சி 12

[வெள்ளித்திரை 1925 ஜனவரி முதல் தேதி என்ற காலண்டர் தெரிகிறது. விறு விறு என்று மாதங்கள் மாறுகின்றன. 1926 ஜன வரி முதல் தேதி காட்சியளிக்கிறது தமிழ் முன்னேற்றச் சங்கம் என்ற போர்டு அகற் றப்பட்டு, தமிழ்க் கலை வளர்ச்சி முன்னேற் றச் சங்கம் என்ற போர்டு மாட்டப்பட் டிருக்கிறது. நடனம் நடைபெறுகிறது. பொதுஜனங்கள் பார்த்துக் களிக்கின்றனர். நடன முடிவில் சேகர் மேடையில் தோன்றி]

சேகர்:-சகோதர சகோதரிகளே! சென்ற ஆண்டுவரை இதைத் தமிழ் முன்னேற்றச் சங்கமாக நடத்தினேம். இந்த ஆண்டு தமிழ்க் கலை வளர்ச்சி முன்னேற்றச் சங்கமாக

மாற்றியிருக்கிறோம். சில தினங்களாக இந்த அரங்கிலே பலர் பாடியும் ஆடியும் நமக்குக் களிப்பூட்டினார்கள். இன்று திருமதி பர்வதகுமாரி ஆடியதைக் கண்டு களித்தீர்கள். காலம் மாறுகிறது. அதற்கேற்ப மனிதனும் தன் கருத்தை மாற்றிக்கொண்டே வருகிறான். வெறும் தமிழ் முன்னேற்றச் சங்கமாக இருந்தபோது உள்ளுணர்வை மட்டும் அடைந்து வந்த நாம், தமிழ்க் கலை வளர்ச்சி முன்னேற்றச் சங்கத்தின் மூலம், புற உணர்வு இன்பங்களையும் பெற்று மகிழ்கிறோம். வாழ்க தமிழ்க் கலா ராணிகள்! வாழ்க தமிழ்க் கலை மன்னர்கள்!! வணக்கம்.

[எல்லோரும் கரகோஷம் செய்கின்றனர். திரை விழுகிறது. கூட்டம் கலைந்து செல்கிறது. கூட்டத்திலிருந்து செல்லம் அரங்கை நோக்கிச் செல்கிறாள். உள்ளே நடனப் பெண்களுடன் கை குலுக்கிக் களித்துக் கொண்டிருந்தான் சேகர். அவன் பக்கத்திலே போய் நின்றாள் செல்லம். அவளைப் பார்த்ததும் திடுக்கிட்டவனாக]

சேகர்:-எங்கே வந்தாய்?

செல்:-நல்ல வேளை, ஏன் வந்தாய் என்று கேட்காது போனீர்களே!

[நடனப்பெண்கள் ஆச்சரியத்துடன் இருவரையும் பார்க்கின்றனர். சேகர் அவர்களிடத்திலே இதோ வந்துவிடுகிறேன் என்று கூறிவிட்டு, செல்லத்தை தனியறைக்கு அழைத்துச் சென்று, மிக ஆத்திரமாக]

சேகர்:-உன் முடிவென்ன?

செல்:-நான் கேட்க வேண்டிய கேள்வி இது.

சேகர்:-அப்படியானால் நான் உனக்குச் சொல்லும் பதில் இதுதான். இப்பொழுதே நீ இந்த இடத்தைவிட்டு வெளியேற வேண்டும்.

செல்:-ஆம்; உங்கள் அன்புக் காதலிகள் காத்திருப் பார்கள், அந்த அரிய மலர்களை வாடவிடலாமா?

சேகர்:-செல்லம்!

செல்:-துரோகி!

சேகர்:-உபதேசம் பண்ண உன்னை நான் இங்கே அழைக்கவில்லை.

செல்:-உங்களுக்கு நான் உபதேசம் பண்ணியே தீர வேண்டும்!

சேகர்:-உன் காட்டுக் கத்தலை நான் கேட்கத் தயாரா யிருந்தால்தானே.

செல்:-சேகர், வாழ்க்கை விளையாட்டானதல்ல. இன் பம் பறி போகிறதே என்று ஏங்குகிறது உங்கள் உள்ளம். துன்பம் சூழ்ந்து விட்டதே என்று துடிக்கிறது என் இரு தயம். கேளுங்கள் சேகர். கைப்பெண்ணான என்னைக் காதலித்துக் கர்ப்பவதியாக்கி கசங்கிய மலராகத் தூக்கி எறிந்து விட்டீர்கள். உங்கள் இன்பத்தைத் தணிக்க எத் தனையோ பெண்கள்! அதற்கேற்ற வாழ்க்கை வசதி இன்று உங்களுக்கிருக்கிறது. என்னைப் பாருங்கள். என் வாழ் விலும் மானத்திலும் அக்கரை செலுத்தும் என் தமை யனைப் பாருங்கள். அவர் உங்கள்மீது வைத்திருக்கும்

அன்னை நினைவு படுத்துங்கள். வீட்டை அடகு வைத்துப் பணம் வாங்கித் தந்தார் உங்களுக்கு. கொள்ளை கொள்ளையாகச் சம்பாதித்து விட்டீர்கள். ஆனால், அந்தக் கடனைக் கட்ட உங்களுக்கு மனமில்லை. இன்றோ நாளையோ வீடு தவணைக் கடைக்காரருக்குச் சொந்தமாகி விடும். அதை விட என் மானமும் அதிக நாள் நிலைத்திருக்காது. ஆவன செய்யுங்கள். இந்த அபலையைக் காப்பாற்றுங்கள்.

[அவள் கால்களைப் பற்றுகிறாள்.]

சேகர்:-சீ பேயே! [என்றுகூறி உதறித்தள்ளிவிட்டு]

சேகர்:-டிரைவர்! டிரைவர்!

டிரை:-இதோ வந்துட்டேன் சார்!

[செல்லத்தைச் சுட்டிக் காட்டி]

சேகர்:-இந்த அம்மாளைக்கொண்டு போய் அவள் வீட்டிலே விட்டு வா.

டிரை:-ஆகட்டும் சார்.

[சேகர் விரைவாக நடனப் பெண்கள் இருக்கும் அறையை நோக்கிச் செல்கிறான். செல்லம் தேம்புகிறாள். டிரைவர் திகைக்கிறான்.]

## காட்சி 13

[ரெகுநாதன் வீடு. இரவு நேரம். ரெகுநாதன் நாற்காலியில் அமர்ந்திருக்கிறான். அவர் காலில் விழுந்து விம்மி விம்மி அழுகிறாள் செல்லம்.

ரகு:-விஷத்தை அருந்திவிட்டு விம்மி அழுவதால் பலன் ஏதுமில்லையம்மா.

[எழுந்து அவளைப் பிடித்துத் தூக்கி விடுகிறார். அவள் எழுந்து கண்களைத் துடைத்துக்கொண்டு, தலை குனிந்து சுவற்றில் சாய்ந்தவாறு நிற்கிறாள்.]

ரகு:-உன் மானம் போனதோடு மட்டுமல்ல, தலைமுறை தலைமுறையாகக் காப்பாற்றப்பட்டு வந்த நம்குடும்பக் கௌரவத்தையே அழித்து விட்டாய். [எழுந்து குறுக்கும் நெடுக்குமாக நடந்துக்கொண்டு] நாலு பேருக்கு மத்தியில் நான் எப்படி நடமாடுவேன்?

செல்:-தவறு என்னுடையது மட்டுமல்ல அண்ணா?

ரகு:-உன்னுடைய தவறுக்கு நானும் உடந்தையென்று சொல்கிறாய்?

செல்:-......

ரகு:-உடன்பிறந்த சகோதரி, சின்ன வயதிலேயே விதவையாகி விட்டவள் என்று அளவுக்கு மீறிச் சலுகை கொடுத்தேனே, அதற்கு இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும்.

செல்:-சலுகையோடு நின்றிருந்தால் இந்தத் தவறு நேர்ந்திருக்காது. வித்வையான எனக்கு மறுமணம்செய்து வைப்பேன் என்றீர்கள். மணாளனை வருபவர் யார் என்றும் சொன்னீர்கள். அவருடன் தாராளமாகப் பழகவும் அனுமதித்தீர்கள். கிணற்றருகே குழந்தையை விட்டுவிட்டு, கிணற்றில் குழந்தை விழுந்த பிறகு கை சேதப்படும்

தாயைப் போலக் கலங்குகிறீர்கள். என்ன செய்வேன் அண்ணு," உணர்ச்சியை உறுதி மொழியினுல் தடுத்துவிட முடியாது என்று நீங்கள்தானே சொன்னீர்கள். நம்பி னேன், நாசம் செய்து விட்டார். எல்லா விதத்திலும் துர்ப்பாக்யவதி நான். சாவதற்கும் அஞ்சவில்லை; தங்கள் சம்மதந்தான் தேவை.

ரகு:-அழுகை அல்லது பயமுறுத்தாட்டல், இந்த இரண்டைத் தவிர வேறு எதைக் கற்றிருக்கிறார்கள் இன் றையப் பெண்கள். நெருங்கிப் பழகச் சொன்னேன் என் கிருய். அதற்காக நேர்மையைத் தவற விட்டு விடுவதா? வித வையான உனக்குத் திருமணம் நடத்தி வைப்பேன் என் றது குற்றமென்கிருய். திருமணத்திற்கு முன்பு தீச்செயல் புரியச் சொன்னேனு? பட்டாடை வாங்கித் தருகிறேன் என்று சொன்னதும், வீட்டிலுள்ள நூலாடையைக் கொளுத்தி விடுவது விவேகமான செயலல்ல. உன் தவ றுக்கு நியாயம் கற்பிக்க முயலாதே. தவறு நேர்ந்தவுடன் சொல்லியிருந்தால் எவ்வளவோ நன்ருயிருந்திருக்கும். இப்பொழுதாவது சொல்ல வேண்டுமென நினைத்தாயே. அந்த வரையில் நீ நல்ல பெண்தான் போ.

செல்:-......

ரகு:-ஏனம்மா நிற்கிருய்?

செல்:-முடிவு?

ரகு:-முடிவென்ன, நீ நினைக்குமளவிற்கு சேகர் தப்பானவன் என்று நான் நினைக்கவில்லை; காலையில் அவ னைச் சென்று பார்க்கிறேன். என்னிடத்தில் அன்பும் மரி யாதையும் அவனுக்கு உண்டு. நான் சொன்னுல் தட்ட

மாட்டான். எல்லாம் சந்தோஷமாகவே முடியும். நீண்ட நேரம் ஆகிவிட்டது, மனதை அலட்டிக் கொள்ளாதே. அசம்பாவிதமாக எதையும் செய்துவிடாதே. போ, போய் படுத்துக் கொள்.

[செல்லம் தன் அறையை நோக்கிச் செல்கிறாள். ரெகுநாதன் இப்படியும் அப்படியுமாக சிந்தனை செய்தவாறு நடந்துக் கொண்டிருக்கிறான்.]

## காட்சி 14

[சேகரும் ரெகுநாதனும் நாற்காலியில் அமர்ந்திருக்கின்றனர். சேகருடைய அலங்காரமும் அவனுடைய வீட்டு அலங்காரமும் பெரிய பணக்காரன் வீடு என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. ரெகுநாதன் நாற்காலியிலிருந்து எழுந்துக்கொண்டு]

ரெகு:-உன் முடிவு இதுதானா?

[சேகரும் எழுந்து நின்று]

சேகர்:-ஆம்; அதுவும் ஒரு மதிப்பிற்குரிய ஆசிரியர் என்ற காரணத்தால் இப்படிச் சொல்லுகிறேன்.

ரெகு:-இல்லையென்றால்?

சேகர்:-எத்தனையோ வழுக்கி, விழுந்த பெண்களைப் பார்த்திருக்கிறேன். அவர்களின் சகோதரனுக்கு என்ன மதிப்புத் தருவேனோ அதே மதிப்புத்தான் உங்களுக்கும் தந்திருப்பேன்.

ரகு:-பணம் சேர்ந்த உடன் எல்லோருடைய புத்தியும் கெட்டு விடுவதில்லை என்று நான் நம்பிக் கொண்டிருந்தேன்.

சேகர்:-நான் தங்கள் உதவியால் முன்னுக்கு வந்தவன் என்பதைச் சுட்டிக் காட்டுகிறீர்களா?

ரகு:-தவறு என்ன அதில்?

சேகர்:-உங்கள் உதவியால் நான் முன்னுக்கு வந்திருக்கலாம். உங்களிடத்தில் அன்பும் மரியாதையும் செலுத்துபவனாக இருந்திருக்கலாம். அதற்காக நெறிதவறியவளை வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக்கொள்ள வேண்டுமா? உங்கள் தங்கை உங்களுக்கு உயர்வாக இருக்கலாம். நான் அவ்வளவு தூரத்திற்கு மானமிழந்தவனல்ல சார்.

ரகு:-நிதானித்துப் பேசு சேகர். யாரிடத்தில் பேசுகிறோம் என்பதை மறந்து உளராதே. யார் நெறி தவறியது. நிம்மதியாக வீட்டிலிருந்த விதவையிடம் நெருங்கி, அன்பொழுகப் பேசி, அவள் கற்பைச்சூறையாடிய கயவன் நீ! கண்யமுடன், மணம் புரிந்துகொள் என்று கேட்டால் வார்த்தையை நீட்டுகிறாய். கல்லூரியில் படித்தவன், கண்யத்தைக் கற்றுக் கொண்டிருப்பாய் என்று நினைத்தேன். காட்டு மிருகத்திலும் கேவலமானவன் என்பதைக் காட்டி விட்டாய். உத்தமன் என்று நம்பி உன்னை வீட்டில் பழக விட்டேன், உன் யோக்கிதையை நன்றாக விளங்க வைத்து விட்டாய். நாணயஸ்தன் என்று நம்பி, நான் குடியிருந்த ஒரே வீட்டையும் அடகு வைத்துப் பணம் வாங்கிக்கொடுத்தேன். அந்தப் பணத்தைக்கொண்டு பல ஆயிரம் ரூபாய் சம்பாதித்திருக்கும் நீ, அந்தக் கடன் பணத்தைக் கட்

டாது விட்டு விட்டாய். நாளை என் வீடு ஏலம் போகும். இன்று நீ என் தங்கையைக் கெடுத்து, என் மானத்தையே ஏலம் கூறிவிட்டாய். பசுத் தோல் போத்திய புலி என்று உன்னை ஆரம்பத்தில் அறியாது போனேன்.

சேகர்:-அருமையான பிரசங்கம் சார். ஆனால், இந்த மாதிரி பிரசங்கங்களைக் கேட்டு கேட்டுப் பழகி விட்டவன் நான். என்னை ஏமாற்ற முடியாது. கைம்பெண்ணை உங்கள் தங்கையை என் தலையில் கட்டப் பார்த்தீர்கள். அதற்கு லஞ்சம், நீங்கள் வீட்டை அடகு வைத்துப் பணம் வாங்கிக் கொடுத்தது. செல்வம் உத்தமியாக இருப்பா ளென்று நினைத்து மணம்செய்துக் கொள்ளலாமென ஓரளவிற்கு நம்பினேன். அவளாதான் ஒரு உதவாக்கரை என் பதை நிரூபித்து விட்டாள். அதற்குப் பிறகுப ஏமாறு வேன் என்று பிரசங்கம் செய்து பார்க்கிறீர்கள்.

ரெகு:-சேகர், பணமும் பத்து ஆட்களும் இன்று உனக்கு இருக்கலாம். அந்தத் தைரியத்தால் என்போன்ற ஏழைகளை பதறப் பதறப் பேசுகிறாய். ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளாக குடும்பத்தின் கருவையே அழித்து விடும் என்பதை நீ நினைத்துப் பார்க்கவில்லை.

சேகர்:-சார், பரந்த அநுபவம் படைத்த பகுத்தறிவு வாதி நான். வறட்டு வேதாந்தங்களை நம்பி வாழ்க்கையை இழந்து விடுபவனல்ல. உங்கள் கடையைக் கட்டலாம். உங்கள் தங்கைக்கு நான் ஒருவன் மட்டும் ஆசை நாயகன் இல்லை சார். அசல் விபசாரி அவள். அவள் அண்ணனென்று உங்களைச் சொல்லவே நான் வெட்கப்படுகிறேன்.

ரெகு:-என்னடா சொன்னே?

[ஆத்திரத்துடன் காலில் அணிந்திருந்த செருப்பைக் கழட்டி அடிக்கப் போகிறார். சேகர் அதைத் தடுத்து]

சேகர்:-போ வெளியே! [அனுப்பிவிட்டு]

சேகர்:-கற்பாம் கண்ணியமாம் கதை அளக்கிறான்!

## காட்சி 15

[ரெகுநாதன் வீடு. சோர்ந்துபோய் ரெகுநாதன் வீட்டினுள் நுழைகிறார். செல்லம் ஓடிவந்து]

செல்:-என்ன சொன்னாரண்ணா?

[ரெகுநாதன் சேரில் அமர்கிறார்.]

ரெகு:-......

செல்:-ஏனண்ணா பேச மாட்டேனென்கிறீர்கள்? அவரைப் பார்க்கவில்லையா?

[அருகில் கிடக்கும் விசிறியை எடுத்து விசிறுகிறாள்:]

ரெகு:-பார்த்தேன்.

செல்:-என்ன சொன்னார்?

ரெகு:-பலனொன்றுமில்லை.

செல்:-ஆ! [திகைப்படைகிறாள்]

ரெகு:-அதைரியப்படாதேயம்மா. கஷ்டம் வரும்போது தான் தைரியமாக இருக்க வேண்டும். இரவு நான் உன் ...ல் சிறிது ஆத்திரமாகப் பேசிவிட்டேன். நீ என்ன

செய்வாய்? ஐந்து வயதில் தைத்த சட்டையை, ஐம்பது வயதான பிறகும் போட்டுக் கொள்ள வேண்டும் என்பதைப்போல் இருக்கிறது நம்சமுதாய அமைப்பு. பலஆயிரம் ஆண்டுகளுக்குமுன் வகுக்கப்பட்டவை நம் இந்துமதச்சட்டதிட்டங்கள். இன்று நமக்கு அது ஒத்து வரவில்லை. மீற நினைக்கும்பொழுது இதுபோன்ற ஆபத்துக்கள் நேருகின்றன. கல்லூரி மாணவர்களிலே நானறிந்தவரை சேகரைத்தான் யோக்யனென்று நம்பியிருந்தேன். முற்போக்குவாதி, சீர்திருத்தக்காரன், பழமையைத் துணிவுடன் எதிர்க்கும் திடசித்தம்கொண்டவன் என்றெல்லாம் முடிவு கட்டியிருந்தேன். அந்த நினைப்பில்தான், அவனை நீ மணந்துகொள்ள வேண்டுமென்றும் கூறினேன். பணமும் பத்து ஆட்களும் சேர்ந்ததும், அவன் போக்கே மாறிவிட்டது. மூர்க்கத்தனமாக என்னிடத்தில் நடந்துகொண்டான். என்ன செய்வதென்றே எனக்குத் தோன்றவில்லை. இன்றோ நாளையோ இந்த வீடு கடன்காரனுக்குச் சொந்தமாகிவிடும். திக்கற்ற நிலை! தெய்வங்கூட உதவ முடியாத சூழ்நிலை.

[வெளியிலிருந்து]

போலீ:-சார், சார். [செல்லம் சென்று கதவைத் திறக்கிறாள்.]

போலீ:-ஐயா இருக்கிறீங்களா? [என்று கேட்டுக்கொண்டே ஒரு போலீஸாரும், லேடி டாக்டரும், சப் இன்ஸ்பெக்டரும் உள்ளே நுழைகிறார்கள். அவர்களைப் பார்த்ததும்]

ரகு:-வீட்டை ஜப்தி செய்ய வந்திருக்கிறீர்களா? இப்பொழுதே நாங்கள் காலி செய்து விடுகிறோம் சார்.

[ரெகுநாதனைச் சேரில் அமரச்செய்து, அருகி
லிருந்த சேரில் தானும் அமர்ந்துகொண்டு]

சப் இ:-ஜப்தி செய்ய நாங்கள் ஏன் சார் வருகிறோம்? அதற்கு அமீனா வருவார்.

ரெகு:-நீங்கள் எதற்கு வந்திருக்கிறீர்கள்?

சப் இ:-இந்தத்தெருவிலிருப்பவர்கள், உங்கள் தங்கை கர்ப்பவதியாக இருப்பதாகவும், அதைக் கலைத்துவிட முயற்சி நடக்கிறதென்றும் பெட்டிஷன் போட்டிருக்கிறார்கள். இது உண்மையானால், கர்ப்பத்திலிருக்கும் சிசுவிற்கு எவ்வித ஹானியும் ஏற்படாமல் காப்பாற்ற வேண்டியது கவர்மெண்டாரின் பொறுப்பு. அதை அறிந்து போகவே வந்தோம். இதோ லேடி டாக்டர். இவர் உங்கள் சகோதரியின் உடலைப் பரிசோதிக்க வேண்டும்.

[செல்லம் மெதுவாகத் தன் அறையை நோக்கி
நழுவுகிறாள். லேடி டாக்டர் அவளைப் பின்
தொடர்கிறாள். ரெகுநாதன் ஒன்றுந்தோன்
றாத நிலையில் எழுந்து கொல்லைப்புறம் செல்
கிறார்.]

சப் இ:-சார், எங்கே போகிறீர்கள்?

ரெகு:-இதோ வந்து விடுகிறேன்.

[செல்லத்தின் அறை. லேடி டாக்டரின் கால்
களைப் பிடித்துக் கெஞ்சியவாறு]

செல்:-டாக்டரம்மா, என் மானத்தை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும். ஒரு சண்டாளனின் ஆசை வார்த்தையை நம்பி மோசம் போனேன். அண்ணன் மானமுடை

யவர். பல தலைமுறையாகக் கௌரவத்துடன் வாழ்ந்து வந்தது எங்கள் குடும்பம். என்றால் என் குடும்பக் கௌரவமே கெட்டு விட்டது. நான் கர்ப்பவதி என்பது வெளியில் தெரிந்தால் அத்துடன் சகலமும் அழிந்துவிடும். இந்த ஆபத்திலிருந்து என்னைக் காப்பாற்றுங்களம்மா. இந்த உதவியை மட்டும் செய்தால் உங்களைத் தெய்வமாக எண்ணித் தினம் பூஜிப்பேன். தாயற்ற எனக்கு நீங்கள் தானம்மா தாய். தயவு செய்யுங்களம்மா.

லேடி டா:-உன் நிலைமைக்கு நான் மிகவும் வருந்துகிறேன். உனக்கு நான் என்ன உதவி செய்ய முடியும்? உள்ளதை இல்லையென்று எப்படிச் சொல்வது? அரசாங்கத்தில் அதற்காகவா எனக்குச் சம்பளம் தருகிறார்கள் ?

செல்:-என்ன செய்வீர்களோ எப்படிச் சொல்வீர்களோ! என்னை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும். இல்லையென்றால் தற்கொலை செய்துக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

லேடி டா:-கவலைப்படாதே செல்லம். நீயோ, உன் குழந்தையோ, தற்கொலை செய்துக் கொள்ளக் கூடாதென்பதற்காகவே அரசாங்கம் என்னை அனுப்பியிருக்கிறது. நீ உயிரை மாய்த்துக் கொள்வதென்பது அவ்வளவு சுலபத்தில் நடக்கக்கூடிய காரியமல்ல.

[செல்லம் விம்மி விம்மி அழுகிறாள். இரக்கம் காட்டும் தொனியில்]

லேடி டா:-சரி செல்லம். உனக்காக நான் பொய் சொல்வதாக வைத்துக்கொள். நாளைக்கு உனக்குப் பிரசவம் ஆனதும், இந்தத் தெருவிலிருப்பவர்கள் சும்மா இருப்பார்

களா? நான் பொய் சொன்னேனென்று பெடிஷன் எழுது வார்கள். அப்புறம் என் வேலை போகும், இதை நீ விரும்பு கிறாயா?

செல்:-அந்த நிலை ஏற்படாமல் நான் எப்படியும் காப் பாற்றுவேனம்மா. நான் ஒரு பெண். என்போன்ற பெண் களால்தான் என் நிலையை உணர முடியும். தாய்க் குலத் தின் தாயகமாக விளங்கும் உங்கள் தாழ் பிடித்துக் கேட்டுக் கொள்கிறேன் என் மானத்தைக் காப்பாற்றுங்கள். என் மானத்தைக் காப்பாற்றுங்களம்மா!

[கால்களைக் கட்டிக்கொண்டு அழும் செல்லத் தைத் தூக்கி நிறுத்தி, தலையைக் கோதி விட்ட வண்ணம்]

லேடி டா:-சரி வா போகலாம்.

[இருவரும் ஹாலுக்கு வருகின்றனர். லேடி டாக்டரைப் பார்த்து]

சப் இ:-என்ன டாக்டர், பெண்ணைப் பார்த்தால் பரி தாபமாக இருக்கிறதே?

லேடி டா:-பொய் பெடிஷன். தெருவில் ஒரு விதவை இருந்தால், அவளைப் பற்றி ஏதாவது வீண் வதந்திகளைக் கிளப்பி விட்டுக்கொண்டே இருப்பார்கள். செல்லம் ஓர் உயர்ந்த உத்தமி. அவளைப்பற்றி வீணுகக் கதை அளக் கிருக்கிறார்கள் வாருங்கள் போகலாம்.

சப் இ:-புரபஸரிடம் சொல்லிவிட்டுப் போவோம்

லேடி டா:-எங்கே அவர்?

செல்:-எங்கே அண்ணு?

போலீ:-பின்பக்கம் சென்றார்.

[செல்லம் கொல்லைப்புறம் ஓடுகிறாள். சிறிது நேரத்தில் ஐயோ அண்ணா என்று அலறுகிறாள். எல்லோரும் ஓடுகிறார்கள். ரெகுநாதன் தூக்கு மாட்டிக்கொண்டு தொங்குகிறார். பிரேதம் இறக்கப்படுகிறது. பிரேதத்தின்மீது விழுந்து கதறுகிறாள செல்லம். அமீனா சில ஆட்களுடன் வருகிறார்.]

சப் இ:-யார் நீங்கள் ?

அமீனா:-கோர்ட் அமீனா. இந்த வீட்டை ஜப்தி செய்ய வந்திருக்கிறோம்.

[அமீனாவின் கூடவந்த ஆட்கள், சாமான்களை அப்புறப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.]

சப் இ:-பிரேதத்தையும், இந்தப் பெண்ணையும் ஸ்டேஷனுக்கு கொண்டு வா. [என்று போலீஸிடம் சொல்லி விட்டுப் போகிறார். போலீஸ்காரர்கள் பிரேதத்தைத் தூக்கிச் செல்கின்றனர்.]

## காட்சி 16

[தெரு. செல்லம்தள்ளாடித்தள்ளாடிவீட்டிற்கு வந்துக் கொண்டிருக்கிறாள். தண்ணீர் எடுத்துச் சென்றுக்கொண்டிருக்கும பெண்களில் இருவர்.செல்லத்தைப் பார்த்ததும்]

ஒரு:-சண்டாளி! ஒரு குடும்பத்தையே அழித்து விட்டாள். செல்வதைப் பார், சிங்காரமாக.

மற்:-அந்தக் காலத்திலே யாரோ ஒருத்தி, யானையைக் குத்தி முறத்தாலே மறைச்சதாகக் கதை சொல்லுவாங்க. அவளையும் மிஞ்சிவிட்டா இளவயத்திலே நிறைபுள்ளையெ வச்சுகிட்டு, இல்லேன்னு சொல்லும்படி செய்திட்டாளே! இந்தச் சாமர்த்தியம் யாருக்கு வரும்?

ஒரு:-பாவம், அந்தச் சின்னப் புள்ளெ விநோதனை நெனைச்சாத்தா பரிதாபமா இருக்கு. இருந்த வீடும் கடன் காரனுக்குப் போயிடுச்சு. அநாதையாப்போன அந்தப் புள்ளெய இந்தச் சண்டாளி யாரிடத்திலே விக்கப் போறாளோ?

மற்:-இந்தப் பவுசு கெட்ட கழுதையில்ல செத்திருக் கணும்?

ஒரு:-அவன் மானஸ்தன். மானத்துக்கஞ்சித் தூக் குப் போட்டுக் கொண்டான். இந்த நாடுமாறி ஏஞ் சாகுது.

[செல்லம் அவர்களைத் தாண்டி வேகமாகச் செல்கிறாள்.]

மற்:-போறா வேகமா, பொதைச்சு வச்சதை எடுக்க.

## நிழல் காட்சி

[செல்லம் விநோதனைத் தூக்கிக் கொண்டு நடக்கிறாள். எங்கிருந்தோ சோகக்கீதம் ஒலிக்கிறது. பாட்டு முடியில, குடிசைகள் நிறைந்த தோட்டிகளின் சேரிக்குப் பக்கத்தில் மயங்கி விழுகிறாள் செல்லம். விநோதன், அத்தே அத்தே என்று கூப்பிடுகிறான். வேலையிலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த தோட்டி முருகனும், அவன் மனைவி வள்ளி யும் இதைப் பார்க்கிறார்கள்.]

முரு:-அடே, நம்ம வாத்தியாரையா தங்கச்சி!

வள்ளி:-[உற்றுப் பார்த்துவிட்டு] ஆமா!

முரு:-சரி, தூக்கு, நம் குடிசைக்குக்கொண்டுபோகலாம்.

[இருவரும் செல்லத்தை தங்கள் குடிசைக்கு எடுத்துச் செல்கிறார்கள்]

## காட்சி 17

[தோட்டி முருகன் குடிசை. மூச்சித்துக்கிடந்த செல்லத்தைத் தண்ணீர் தெளித்து விசிறி, மூச்சுத் தெளிய வைக்கிறார்கள். செல்லம் சிறிது நேரத்தில் எழுந்து உட்காருகிறாள்.]

வள்ளி:-நல்லாயிருந்த குடும்பத்தெ நாசப்படுத்திட்டாங்களே, அவுங்க உருப்புடுவாங்களா?

முரு:-ஊரைத்திட்றதிருக்கட்டும் வள்ளி, உருப்படியா நாம காரியம் பாக்கணும். அந்தக் குடிசையைப் போய் சுத்தப்படுத்து. அம்மாவை அழைச்சுக்கிட்டுப் போய் உட்கார வைக்கலாம்.

செல்:-வேண்டாம் முருகா, நான் போகிறேன்.

[போக எழுந்திருக்கிறாள்.]

முரு:-எங்கேம்மா போறீங்க?

வள்ளி:-தெரியாதுபோலே கேக்கிறீயே? இந்த மாதிரிப் பொண்ணுங்களெல்லாம் முடிவிலே எந்த இடத்தைத் தேடிப்போவாங்க?

முரு:-அத்தா, பாதேவதே. உன் வாயை அடக்கிக்கிட்டுக் கொஞ்ச நேரஞ் சும்மாயிரு.

செல்:-வள்ளி சொல்றதிலே என்ன தவறு முருகா? என்போன்ற சமூகத்திலிருந்து தவறிய பெண்களுக்கு கடைசிப் புகலிடம் தற்கொலைப் பாதைதானே?

முரு:-சமூகப், சமூகம்னு சொல்றீங்களே அம்மா, அது என்னன்னே எனக்குப் புரியல்லே. உங்க குடும்பத்தெக் கெடுத்தாரு சேகரய்யா. அவரு கல்லுப் புள்ளையாராட்டமா இருக்காரு. நீங்க சாகணுங்கிறீங்க. நல்லவங்களெல்லாம் செத்து, கெட்டவங்களெல்லாம் மிஞ்சியிருக்கிறதுக்குப் பேர்தான் சமூகமா? அப்படி ஒரு சமூகம் இருப்பதைவிட, அழிஞ்சுப் போறதே தேவலாம்மா. நீங்க செத்துப் போறேங்கிறீங்க. [விநோதனைக் காட்டி] இந்தக் குழந்தையினுடைய கதி என்னாவுறது. நீங்கதானே இதுக்குத் துணை?

[சிந்திக்கிருள். அண்ணன் சொல்லிய சொல் கிளைவிற்கு வருகிறது.]

"செல்லம்! உயிர் உனக்குத் துச்சமாகத் தோன்றலாம். ஆனால், உன்னை நம்பி விநோதன் என்ற இளம் ஜீவன் சுற்றிக் கொண்டிருக்கிறது. அந்தப் பச்சை மண்ணின் எதிர்காலம் உன் கையில்தானிருக்கிறது. பருவத்துடன் போராடு. தோற்றுவிட மாட்டேனென்கிறாய். தவறித் தோற்றுவிட்டால், சமுத்திரம் முழங்கால் அளவ என்கிறாயே, அதைமட்டும் விட்டுவிடு."

முரு:-என்னம்மா யோசிக்கிறீங்க?

விநோ:-அத்தே, நம்ம வீடு எங்கேயோ இருக்குதின்னியே வா போகலாம்.

முரு:-எங்கே ஐயா போறது? இனிமே நீங்க இங்கேதானிருக்கணும்.

வினோ:-ஊஹூம், நாமாட்டேன்.

வள்ளி:-ஏந்தம்பி?

வினோ:-இங்கே எங்கேப் பாத்தாலும், அசிங்கமும் நாத்தமுமா இருக்குது!

[வினோதனிடம் நெருங்கி]

முரு:-எல்லாங் கொஞ்ச நேரத்திலே சரியாப் போயிடும் தம்பி. சுத்தப் படுத்திடுறேம்.

வள்ளி:-ரொம்ப நாறுதா தம்பி. வாசனை இருக்குப் பாரு, அதை உடம்புக்குத்தான் பூசிக்கிறலாம். ஆனா, நாறின கருவாட்டை வச்சிக்கிட்டு கஞ்சி குடிக்கலாம் தெரியுமா உனக்கு?

முரு:-ஏய், என்னடி தத்துவம் பேசுறே குழந்தைகிட்டப்போயி. அந்தக் குடிசையைப் பெருக்கு. [செல்லத்தைப் பார்த்து] அம்மா எழுந்திருச்சு வாங்க, குடிசையிலே போய் உக்காரலாம்.

வினோ:-கருவாடுன்னா என்ன?

முரு:-பிறகு சொல்றேஞ் சாமி.

செல்:-இங்கே தங்கி நான் என்ன பண்றது முருகா?

முரு:-அதெல்லாம் பிறகு யோசிக்கலாம்மா. பிரசவ காலம் வரையிலும் நீங்க இங்கேதானிருக்கணும். அதுக்குப் பிறகு உங்க இஷ்டம். எங்கே வேணுமின்னாலும் போகலாம். எழுந்திருச்சு குடிசைக்குப் போங்க. நான்

டவுனுக்குப் போயி, புதுசா ரெண்டு கலயம், உப்பு, புளி, அரிசி யெல்லாம் வாங்கிக்கிட்டு வாறே.

செல்:-அதெல்லாம் ஒன்றும் வேண்டாம் முருகா.

[வள்ளியைப் பார்த்து]

முரு:-ஏண்டி நிக்கிறே, அம்மாளெ அழைச்சுக்கிட்டுப்போடி.

வள்ளி:-அவுங்கதா என்னமோ சொல்றாங்களே!

முரு:-அவங்க அப்படித்தாண்டி சொல்லுவாங்க. போ, அழைச்சுகிட்டுப் போயி காரியத்தைப் பாரு. நான் டவுனுக்குப் போயிட்டு வாறே. [செல்கிறான்.]

## காட்சி 18

[சேகர் வீடு. வெளி ஹால். சேகரும் ச. க. வும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.]

ச. க.:-ரொருநாதனை நான் வஞ்சம் தீர்த்துக்கொள்ள நினைத்ததுண்டு. ஆனால், அவன் வாழ்வு இப்படிப் பரிதாபமாக முடியுமென்று நான் எதிர்பார்க்கவேயில்லை.

சேகர்:-செத்தபின் இரங்குவதென்பது சர்வசாதாரணமான விஷயம்.

ச. க.:-நீ சொல்வதின் அர்த்தம்.

சேகர்:-நீங்கள், இப்பொழுது காட்டும் அநுதாபத்திலே நூற்றிலொரு பங்கு அவர் இருக்கும்போது காட்டியிருந்தால், அவர் இறந்திருக்க மாட்டார்.

ச. க.:-ரகுநாதன் செத்ததற்கு நான் காரணமென்றா சொல்கிறாய்?

சேகர்:-நீங்கள் நானென்று பிரிக்க வேண்டியதில்லை. நாமிருவருமே காரணம்.

ச. க.:-உரத்துப் பேசாதே. இன்னும் ஆபத்திலிருந்து நாம் விடுபடவில்லை.

சேகர்:-இன்னும் என்ன இருக்கிறது?

ச. க.:-செல்லம் உயிரோடு இருக்கிறாள்!

சேகர்:-அவள் உயிருடனிருப்பதால் எனக்கு ஏதேனும் அவமானம் வரலாம். உங்களுக்கு என்ன அதில்?

ச. க.:-வீட்டை ஜப்தி செய்த நேரத்தில் அவளிடத்தில் கையெழுத்து வாங்கவில்லை. நாளைக்கு அவள் கோர்ட்டுக்குப் போனால்?......

சேகர்:-கோர்ட்டாவது, கத்தரிக்காயாவது? குடிக்கக் கஞ்சிக்கே வழியில்லை. ஆத்திலேயோ குளத்திலேயோ விழுந்து அவளும் அவள் அண்ணனைப்போல இந்நேரம் தற்கொலை செய்துக் கொண்டிருப்பாள்.

ச. க.:-நீ நினைப்பது தவறு சேகர். இளைஞர்களுக்கு எதிலும் ஆழ்ந்த அநுபவம் இருப்பதில்லை. போலீஸ் ஸ்டேஷனிலிருந்து அவள் திரும்பிய பிறகு, என்ன ஆனாள் என்பதை அறிந்து வர ஆள் அனுப்பினேன். நகரைக் கடந்து முனிசிபல் தோட்டிகள் வாழும்பகுதிவரை சென்றதாகத் தெரிகிறது. அதற்குப் பிறகு என்ன ஆனாளென்று தெரியவில்லை!

சேகர்:-தேடிப் பிடித்து என்ன செய்வதாக உத்தேசம் தங்களுக்கு.

ச. க.:-எனக்கு என்று கேட்கிறாயே? உனக்கு இதில் பொறுப்பில்லையா?

சேகர்:-இருக்கிறதினால்தான் கேட்கிறேன்.

ச. க.:-அவனைக் கண்டுபிடித்து ஊரைவிட்டே துரத்தி விடவேண்டும்.

[கடைத் தெருவில் வாங்கிய பானை சட்டிகளுடன் முருகன் பிரவேசிக்கிறான்.]

முரு:-சாமி.

சேகர்:-யார்டா அது?

முரு:-முனிசிபல் தோட்டிசாமி.

சேகர்:-என்ன வேணும்?

முரு:-ஒரு அனாதைப் பொணம் செத்துப் போச்சுங்க. அதைத தூக்கிப் பொதைக்க காசு இல்லீங்க. இப்படித் தண்டல் செய்துகிட்டு வாறே. நீங்களும் ஏதாவது கொடுத்தா புண்ணியமா இருக்கும்.

ச. க.:-ஆணா, பெண்ணாடா?

முரு:-கர்ப்பவதிங்க!

சேகர்:-ஆள் எப்படி இருக்கா?

முரு:-நல்லா வாழ்ந்த குடும்பத்தும் பொண்ணு மாதிரி தெரியுதுங்க.

ச. க.:-ஐயோ பாவம்! யார் பெற்ற பெண்ணோ தெரியவில்லை. சேகர், பணம் இருந்தா ஒரு பத்து ரூபாய் கொடுத்தனுப்புப்பா.

[பர்ஸ்கட்டை கையால் தடவி, ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து]

சேகர்:-என்னிடம் ஐந்து ரூபாய்தான் இருக்கிறது. உங்களிடம் ஐந்து ரூபாயிருந்தால் தாருங்கள். பத்து ரூபாயாகக் கொடுக்கலாம்.

[மடியிலிருந்து ஐந்து ரூபாயை எடுத்துக் கொண்டே]

ச. க :-என்னப்பா இதில்கூடவா பங்கு?

சேகர்:-என்ன இருந்தாலும் நாம ரெண்டு பேரும் தொழில் கூட்டாளி இல்லையா? நான் மட்டும் கொடுத்தால் நன்றாயிருக்குமா?

[ரூபாயைப் பெற்றுக் கொண்டு]

முரு:-போய் வாறேஞ்சாமி.

ச. க.:-வா வேண்டாண்டாம் மூதேவி, போ. போயி, அந்தப் பிரேதத்தை சீக்கிரம் எரித்துத்தொலை. [முருகன் முணங்கிக்கொண்டே செல்கிறான். சென்றதும்] அந்தச் சனியனும் தொலைஞ்சுதப்பா. இனிமே நாம நிம்மதியா இருக்கலாம்.

சேகர்:-கடவுள் எப்பொழுதும் உங்களுக்கு அனுசாரனையாகத்தானே இருக்கார்?

ச. க.:-உங்களுக்கு என்று சொல்லாதே, நமக்குன்னு சொல்லு. [இருவரும் சிரிக்கின்றனர்.]

## காட்சி 19

[செல்லம் குடிசை. முருகன் கடைத் தெருவில் வாங்கி வந்த சாமான்களை வாசலில் வைத்து விட்டு]

முரு:-அம்மா!

[வெளியே வந்து]

செல்:-என்ன முருகா! ஏன் இவ்வளவு வாங்கி வந்திருக்கிறாய்?

முரு:-வாங்கிகிட்டு வந்தா என்னம்மா. மிச்சமிருந்தா நாளைக்கி ஆயிட்டுப் போவுது.

செல்:-முருகா, எனக்கு இங்கே தங்கியிருக்கவே பயமா இருக்கு. மேலும், ஊரில் நாலு பேருக்குத் தெரிந்தால் உனக்குந்தானே அவமானம். நான் போயிடுறேன் முருகா.

முரு:-என்னம்மா, சின்னப் புள்ளெ மாதிரிப் பேசுறீங்க. நான் இந்தச் சேரிக்கி நாட்டாமைக்காரன். இங்கே இருக்கிறவங்க எல்லாரும் நான் சொல்றபடி கேக்கக்கூடியவங்க. உசுரு போக அடிச்சாலும் உள்ளதேச் சொல்ல மாட்டாங்க. நீங்க இங்கே வந்திருக்கிது வெளியிலே யாருக்கும் தெரியக்கூடாதுன்னு சொல்லி வச்சிருக்கே. கவலே இல்லாமெ நீங்க இங்கே தங்கி இருங்கம்மா.

செல்:-......

முரு:-இன்னொரு விசேஷம் கேளுங்கம்மா!

[செல்லம் நிமிர்ந்து பார்க்கிறாள்.]

முரு:-வாறபோது இவுங்க எப்படி இருக்கிறானுங் கன்னு பார்க்கலாமின்னுட்டு சேகரய்யா வீட்டுப் பக்கமா போனேன்.

செல்:-அவர் இருந்தாரா? என்ன சொன்னார்? என்னைப்பற்றி ஏதாவது கேட்டாரா?

முரு:-ஓ கேட்டாரு! நீங்க செத்துப் போயிட்டீங் கன்னு சொன்னேன், உடனே சந்தோஷப்பட்டு பத்து ரூபா கூடக் கொடுத்தாரு.

செல்:-நான் செத்துப் போனேன் என்று சொன்னாய்? ஏன்?

முரு:-அவுங்க என்ன சொல்றாங்கன்னு பார்க்கலா முன்னு சொன்னேன். மேலும், அவங்க மூலமா உங்களுக்கு ஏதாகிலும் ஆபத்து வாறதாயிருந்தா அதுவும் தடை பட்டுப் போயிடும் பாருங்க.

செல்:-இன்னும் என்ன ஆபத்து வர இருக்கிறது முருகா. எல்லா ஆபத்தும்தான் வந்தாச்சே.

முரு:-அப்படிச் சொல்லாதீங்க அம்மா. நம்மைவிட சஞ்சலமும், துன்பமும் படற ஜனங்க கோடானு கோடிப் பேரு இருக்கிறாங்க. அவுங்களையெல்லாம்விட நாம எவ்வளவோமேலின்னு நெனைச்சாத்தா, நாம வாழ முடியும். அந்த நெனைப்பிலேதாம்மா நாங்களெல்லாம் வாழ்ந்துக்கிட்டி ருக்கோம்.

செல்:-பிரசவ காலம் வரை இங்கே தங்கி இருக்கச் சொல்கிறாயே? ஒரு வேலையும் இல்லாமல் நான் எப்படித் தங்கியிருப்பது? மேலும், உனக்குப் பொருள் நஷ்டம் வேறு.

முரு:-எனக்கென்னம்மா நட்டம்? இந்தச் சேரியிலே பல குடும்பங்கள் இருக்கு. நிறைய குழந்தைகளும் இருக்கு. அந்தக் குழந்தைகளையெல்லாம் வரச் சொல்றே. ஓய்வு நேரத்திலே பாடம் சொல்லிக் கொடுங்க. ஒரு குழந்தைக்கி இரண்டணா வீதம் கொடுத்தாங்கன்னாக்கூட உங்க சாப்பாட்டுக்குப்போதும். மற்றவைகளை நாங் கவனிச்சிக்கிறே.

செல்:-என்மீது அன்பு செலுத்த வேண்டியவர்கள் வெறுக்கிறார்கள். எங்கோ உள்ள ஏழை நீ, என்மீது அன்பு செலுத்துகிறாய். இந்த விசித்திர மனப்பான்மையை என்னால் புரிந்துக்கொள்ளவே முடியவில்லை.

முரு:-புரிந்துக்கொள்ள என்னம்மா இருக்கு? நான் ஏழை. பசியின் கொடுமை எனக்குத் தெரியும். அதனாலே தான் என் நெஞ்சிலே பச்சாதாபம் தோணுது. பணக்கார வுங்க பசியறியாதவுங்க. அவுங்க மனசிலே இரக்கமே பிறக்காது. ஏழைக்கி ஏழைதாம்மா உதவுவாங்க. இதை நீங்க எங்கே போனாலும் காணலாம்.

செல்:-முருகா! நீ சாதாரணத் தோட்டியல்ல. உத்தம மனிதன். உயர்ந்த மேதை!

முரு:-அம்மா! இந்தப் புகழ்ச்சி இருக்குதே, இதுக்குள்ள போன்த வேறு எதுக்கும் கிடையாதம்மா. ஒரு தடவை கேக்கும்போது மனிதன் சந்தோஷப்படுறான். மறுதடவை கேட்கும்போது மயங்கி விடுறான். அப்புறம் அவனிடத்திலுள்ள அனைத்தையும் கொள்ளையடிச்சாலும் அவனுக்குப் புரியிறதில்லே. நினைச்சுப் பாருங்க, சேகரையா

உங்களைப் புகழாட்டா நீங்க இந்த நிலைமைக்கி வந்திருப்பீங்களா ?

செல்:-......

முரு:-போங்கம்மா, புள்ளெ பசியோட இருக்கும். சமைச்சுச் சாப்பாடு போடுங்க. வள்ளி காத்துக்கிட்டிருப்பாளா போறே.

[முருகன் போகிறான். செல்லம் வெறித்தபடி அவனையே பார்க்கிறாள்.]

## காட்சி 20

[வெள்ளூரில் ஒரு வயோதிகர் வீடு. மாலைநேரம். ஹாலில் ஒரு குழந்தை அழுதுகொண்டே கிடக்கிறது. வாயிற்படியிலே செல்லம், விநோதனோடு நின்றுக் கொண்டிருக்கிறாள்.]

செல்:-அம்மா !

[பதிலில்லை, சிறிது நேரம் சென்றபின்]

செல்:-அம்மா ! அம்மா !!

[பதிலில்லை, குழந்தை கதறுகிறது.]

செல்:-குழந்தை அழுகிறது. ஒருவரையும் காணோமே!

[பலமாக]

செல்:-அம்மா !

[யாரும் வரவில்லை.]

செல்:-குழந்தைக்கு மூச்சு நின்றுவிடும் போலிருக்கிறதே !

[செல்லம் உள்ளே சென்று குழந்தையைத் தூக்கி பால் கொடுத்து அமைத்துகிறாள். வீட்டினுள்ளிருந்து கடுங்கிக்கொண்டே ஒரு வயோதிகர் வருகிறார்.]

வயோ:-யாரம்மா நீ?

செல்:-நான் ஒரு அனாதை.

வயோ:-அனாதையா? எந்த ஊர்?

செல்:-ரொம்ப தூரம், வெளியூர்.

வயோ:-இளம்பிள்ளைக்காரிபோல் தோன்றுகிறதே! உன் பிள்ளை எங்கே?

[தயங்கிக்கொண்டே]

செல்:-இறந்து விட்டதய்யா!

வயோ:-உனக்கு யாருமில்லையா?

செல்:-இல்லை.

வயோ:-எங்கே வந்தாய்?

செல்:-வேலைதேடிக்கொண்டு ஊர் ஊராய் அலைகிறேன். ஒரு இடத்திலும் வேலை கிடைக்கவில்லை.

வயோ:-பெண்கள் வேலை தேடிக்கொண்டு வெளியில் புறப்படும் காடாம்மா இது? காலிப் பசங்க கண்களிலே பட்டால், மானத்தோடு உன்னை விடமாட்டார்களே.

செல்:-உண்மைதானைய்யா! சத்திரம் சாவடிகளிலே தனித்துப் படுக்க முடியவில்லை. வேலை தேடிப் போகுமிடங்களிலெல்லாம் விஷமக் கண்கொண்டே பார்க்கிறார்கள் ஆடவர்கள். உண்மையைச் சொல்ல வேண்டுமானால், மானத்தை

விட்டாலொழிய இந்த வையகத்தில் வாழமுடியாது போயி ருக்கிறது. ஏன் பெண்ணாய்ப் பிறந்தோம் என்று எனக்கே வேதனையாக இருக்கிறது. உலகத்தில் கடவுள் எல்லோரை யும் ஆண் பிள்ளையாகப் படைத்திருந்தால் எவ்வளவோ நன் றாக இருந்திருக்கும்.

வயோ:-உலகம் பூராவும் இந்த ஆபத்து பரவி நிற்க வில்லையம்மா. நம் நாடு வைதீக நாடு. பெண்களை மூடி வைத்துக் காப்பாற்ற நினைத்தது. சூழ்நிலையால் ஒரு பெண் வெளியேறும்படி ஆகிவிட்டால், ஆண்கள் வட்டாரம் அவளை முறைத்துப் பார்க்கிறது. வெளிச்சம் இருக்கும் இடத்திலதானே இருட்டு இருக்க முடியும்? பாதுகாப்புப் பண்ணினோம், ஆபத்து அதிகமாகி விட்டது!

செல்:-இந்தக் குழந்தையின் தாயார் எங்கே?

வயோ:-அது தாயற்ற குழந்தை! இத்தனை பெரிய வீட் டில், இந்தச் சிசுவும் நானும்தான் வசிக்கிறோம். இனி நீ தான் இந்தக் குழந்தைக்குத் தாய்!

செல்:-......

வயோ:-ஏன் தயக்கம்? நான் வயோதிகன், இந்தக் குழந்தை பால் குடிக்கும் சிசு. எங்களை நம்பி நீயும் உன் குழந்தையும் இங்கு தைரியமாக இருக்கலாம். உனக்கு ஒரு ஆபத்தும் வராது.

செல்:-ஆபத்து வருமென்று அஞ்சவில்லை. எங்களுக்கு ஆதரவு தர நினைக்கும் நீங்களும் அநாதையாக இருக்கிறீர் களே என்பதைப்பற்றி யோசித்தேன்.

வயோ.-நீ பொருளில்லா அநாதை. நான் கொஞ்சம் பணம் வைத்திருக்கும் அநாதை. ஆண்டவனைக்கூட எல்

லோரும் அநாதைகளென்றுதானே சொல்லுகிறார்கள்? . நான் வயது தளர்ந்தவன், மேலும் நோயாளி, அதிக நாள் ஜீவித்திருக்க மாட்டேன். இந்தப் பச்சை மண்ணை நிராதரவாக விட்டு இறந்துவிடப் போகிறோமே என்று ஏங்கிக் கொண்டிருந்தேன். நல்ல வேளை நீ வந்து சேர்ந்தாய். அநாதைக்கு அநாதைதான் ஆதரவு காட்ட முடியும். அநாதைகளை ரட்சிப்பதினால்தான் ஆண்டவனைக்கூட அநாதை என்று மக்கள் நம்புகிறார்கள் போலும், என்னால் நிற்க முடியவில்லை, படுத்துக்கொண்டே என் கதையைச் சொல்கிறேன் வா.

[உள்ளே திரும்புகிறார் வயோதிகர். அவரைத் தாங்கிப்பிடித்தவண்ணம் செல்லமும் உள்ளே செல்கிறாள்.]

## காட்சி 21

[தோட்டி முருகன் வீடு.]

வள்ளி:-குழந்தையைத் தொட்டியில் போட்டுத்தாலாட்டிக் கொண்டிருக்கிறாள்.

[வயோதிகர் வீடு.]

செல்:-குழந்தையை தொட்டியிலிட்டுத் தாலாட்டிக் கொண்டிருக்கிறாள்.

[தோட்டி முருகன் வீடு]

வள்ளி:-தாலாட்டிக் கொண்டிருக்கிறாள்.

[வயோதிகர் வீடு.]

செல்:-தாலாட்டிக் கொண்டிருக்கிறாள்.

[தோட்டி முருகன் வீடு.]

முரு-தாலாட்டுகிறான்.

[இவை மாறி மாறிக் காட்டப்படுகிறது. தாலாட்டுப் பாட்டு முடிகிறது.]

முரு:-அந்த அம்மா வந்திருந்தது உனக்குப் பெரிய அதிர்ஷ்டமாய் போச்சு, இல்லையா வள்ளி!

வள்ளி:-ஆமா, அந்த அம்மா புளளெயைப் பெத்து, எந்தலையிலே கட்டிட்டுப் போயிட்டாங்க. நா படுற கஷ்டம் எனகுத் தெரியும். நீ யென்னமோ சந்தோஷங் கொண்டாடுறே.

முரு:-உனக்கு சங்கதி தெரியுமா வள்ளி? இந்தப் புள்ளெயோட அப்பனுக்கு இன்னும் ஒரு வாரத்திலே கல்லாணமாம். பாட்டுக் கச்சேரி, நடனக கச்சேரி, மேளக் கச்சேரி, அது இதெல்லாம் ஒரே பிரமாதமாம். ஊரெல்லாம் இதே பேச்சாயிருக்கு.

வள்ளி:-இந்தச் சண்டாளனுக்குப் பொண்ணு கொடுக்கிற புண்ணியவான் யாரு?

முரு:-பட்டணத்திலே யாரோ பெரிய பணக்கார வீட்டுப் பொண்ணு. அந்தச் சொத்தெல்லாம் இனிமே இவரைத்தான் சேருமா, அதிஷ்டத்தைப் பாத்தியா!

வள்ளி:-அநியாயக்காரெ. நல்லாயிருந்த குடும்பத்தே நாசமாக்கி கெடுத்துட்டா. அந்தம்மா எங்கே இந்நேரத்திலே பிச்சை எடுத்துக்கிட்டு அலையிராங்களோ?

முரு:-நாம ஒண்ணு செய்யலாமா வள்ளி? அந்த அம்மாளை தேடிப் பிடிச்சு, கூட்டியாந்து, இந்தப் புள்ளை

யைக் கையிலே கொடுத்து, கல்லாணு கோத்திலே அந்த வீட்டுலே கொண்டுபோய்விட்டு, உள்ளதெச் சொல்லச் சொன்னு?

வள்ளி:-உன் முதுகுத் தோலு உறிஞ்சப் போகும். அதைத் தவிர ஒண்ணும் நடக்காது.

முரு:-போடி பயந்தாங்கொள்ளிச் சிறுக்கி!

வள்ளி:-இது ராமர் வாழ்ற உலகமில்லே, ராவணர் வாழ்ற உலகம். நல்லது செய்றவங்களெ நாசப்படுத்து வாங்க, கொடுமை செய்றவங்களெக் கும்பிடுவாங்க தெரியுமா?

முரு:-கொஞ்ச நாளெக்கித்தா. அப்புறம் எல்லாஞ் சரியாப் போயிடும். இது உனக்குத் தெரியுமா?

வள்ளி:-தெரியுந் தெரியும், போய் உன் வேலையைப் பாரு.

இடைவேளை

## 20 ஆண்டுகளுக்குப் பிறகு

### காட்சி 22

[சேகர் வீடு. சேகர் சோபாவில் சாய்ந்திருக்கிறன். இன்னும் இரண்டொரு நண்பர்களும், ச. க.வும், முத்துப் பண்டாரமும்

இருக்கிறார்கள். மேஜைமீது மாலைகள் குவிந்துக் கிடக்கின்றன. பலர், சேகர் கழுத்திலே மாலையைப் போட்டு "சேர்மன் சேகருக்கு ஜே" என்று கூறிச் செல்கின்றனர்.]

சேகர்:- இந்தத் தேர்தலிலே நான் வெற்றி பெற்றதும் போதும், நான் படுகின்ற பாடும் போதும் போடுகிற மாலைகளை ஏற்றுக் கொள்வதற்காக குனிந்து குனிந்து என் கழுத்தே ஒடிந்து விடும் போலிருக்கிறது! இதிலிருந்து விலகிக்கொள்ளவென்றாலும் முடிகிற பாடாய்த் தெரியவில்லை. விடமாட்டேன் என்கிறார்கள்.

ச. க.:- பொதுத் தொண்டு என்றாலே இப்படித்தான் சார். அன்புக்குப் பாத்திரமானவர்களை மக்கள் ஒதுங்கி நிற்க விடுவதில்லை. நானும் பார்க்கிறேன், இந்த ஜனங்களுக்கு உங்களிடத்திலே எவ்வளவு பக்தி!

சேகர்: பக்தி என்றாலும் அதற்கு அளவு வேண்டாமா? நான் நின்ற தொகுதியிலே என்னை ஐந்து பேர் எதிர்த்தார்கள். அந்த ஐந்து பேர்களுடைய டெபாஸிட்டையும் இழக்கச் செய்து விட்டார்கள் இந்தப் பொது மக்கள். சேர்மன் தேர்தலிலே மூன்று பேர் என்னை எதிர்த்தார்கள். தலைக்கு மூன்று ஓட்டுக்கூட கிடைக்கவில்லை.

முத்:- என் சார்! இந்த எலெக்ஷனிலே. மொத்தம் உங்களுக்கு எவ்வளவு செலவாகி இருக்கும்?

சேகர்:- கௌன்சிலர் எலெக்ஷனிலே இருபதினாயிரம், சேர்மன் எலெக்ஷனிலே எண்பதினாயிரம், ஆக ஒரே ஒரு லக்ஷ ரூபாய்தான் செலவு.

முத்:-அப்படியென்றால் பணம் கொடுத்தா ஓட்டு வாங்கினீர்கள்?

சேகர்:-பணம் வாங்காமல் எந்தப் பரதேசிப் பயல் சார், ஓட்டுப் போடுகிறான்?

ச. க.:-பொதுஜனங்க ஓரளவுக்கு யோக்கியமாய்த் தானிருக்கிறாங்க.

முத்:-எப்படி?

ச. க:-ஓட்டுப் போடறேன்னு பணத்தை வாங்கிக் கிட்டு, இன்னொருத்தருக்குப் போடாமல் இவருக்கே போட் டிருக்காங்களே!

சேகர்:-போடலேன்னு எந்தப் பசங்களை நான் சும்மா விட்டிருவேனு?

ச. க.:-பொதுஜன ஆதரவு, பணம், அடி உதை இத் தனையும் இல்லேன்னு எலெக்ஷனிலே ஒருமனுஷன் வெற்றி பெறுகிறது, குதிரைக் கொம்புதான் போலிருக்கே!

சேக:-இல்லேன்னு விட்டுடுங்க. தந்திரம், அதா வது வியாபார முறை. அதுதான் முக்கியம். அது இல் லேன்னு வெற்றிபெற முடியாது.

முத்:-சாமபேததான தண்டம் என்று சதுர்வித உபா யங்களை முன்னோர்கள் சொல்லியிருக்காங்களே, அது இந் தக் காலத்திலே எலக்ஷனுக்குப் பிரயோஜனப்படுது இல் லிங்களா?

சேகர்:-உண்மை.

[வெளியிலிருந்து கமலா உள்ளே வருகிறாள். வண்டிக்காரன் பெட்டி படுக்கையை எடுத்துக்கொண்டு வந்து வைக்கிறான்.]

கமலா:-வெற்றி கிளாட் பாதர். எலெக்ஷனிலே நீங்கள் வெற்றி பெற்றதற்கு மிகவும் பாராட்டுகிறேன். இது படிப்பின் வெற்றி, பணத்தின் வெற்றி, பணக்காரத் திமிரென்று ஓங்கிப் பேசுகிறார்களே அவர்களின் வாயடைக்கும்படியான வெற்றி. வெற்றி, வெற்றி, வெற்றியேதான்!

[சேகர் எழுந்து அவளைத் கட்டிக்கொடுத்துக் கொண்டு—]

சேகர்:-ரொம்ப சந்தோஷம் கமலா. ரயிலிலே வந்தது அலுப்பா இருக்கும். போய் ஸ்நானம் பண்ணி சாப்பிட்டுட்டு வா. பிறகு பேசுவோம்.

[கமலா உள்ளே சென்றதும் சேகர் ஆசனத்தில் அமர்கிறான்.]

முத்:-இது யாருங்க?

சேகர்:-என்னுடைய பெண். தாயை இழந்தவள். பட்டணத்திலே கல்லூரியில் படிக்கிறாள். இவள் சுகத்தை விரும்பியே, இவள் தாய் இறந்த பிறகு நான் மறு விவாகம் செய்துகொள்ளவில்லை.

ச. க.:-நீங்கள் தான் உண்மைக் காதலை—கடமையை—உணர்ந்த மேதை, சிறந்த தியாகி. உங்களை சிலை செய்து வைத்துப் பாராட்ட வேண்டும். அந்தக் காரியத்தை நானே முன்னின்று செய்யப் போகிறேன்.

முத்:-அப்படியானால் முதல் நன்கொடை அய்யாவிடத்திலேயே வசூல் பண்ணிடுவோமே.

ச. க.:-அசல் ஒண்ணாம் நம்பர் யோசனை.

[நோட் புக்கை எடுத்து சேகரிடம் நீட்டுகிறார். சேகர் அதை வாங்கி கையெழுத்திட்டு அவர்களிடம் திருப்பிக் கொடுத்து]

சேகர்:-இதோ, என்னாலான உதவி, சிறு தொகை, 10,000 எழுதியிருக்கிறேன். சிலையைப் பூர்த்தியுடையதாகச் செய்யுங்கள். பணம் போதவில்லையென்றால் கூசாது வந்து கேளுங்கள் தருகிறேன். இதுபோன்ற நல்ல காரியங்களுக்கு உதவாமல் இருக்க முடியுமா?

ச. க.:-உங்கள் தியாக புத்தி எங்களுக்கு நன்றாய்த் தெரியும் சார். போய் வருகிறோம். வணக்கம்.

[கரம் குவித்துக்கொண்டே]

சேகர்.-மாலையில் கடைப் பக்கம் வாருங்கள். இந்த 10,000க்கும் செக் தருகிறேன்.

[ச. க., முத்து இருவரும் ஏககாலத்தில்]

இரு:-அவசியம் வருகிறோம்.

[விடைபெற்று வணங்கிச் செல்கின்றனர். முருகன், வள்ளி, புஷ்பா மூவரும் வருகின்றனர்.]

முரு:-வணக்கஞ்சாமி.

[வள்ளியும் புஷ்பாவும் கரம் குவிக்கின்றனர்.]

சேகர்:-என்னடா சமாச்சாரம்? எங்கே வந்தே?

முரு:-ஐயா சோமாயிட்டதாச் சொன்னாங்க.

சேகர்:-பார்த்துப் பாராட்டிப் போகலாமென்று வந்தியா, ஏண்டா கழுதை?

முரு:-இல்லிங்க. நான் முனிசிபல் தோட்டி.

சேகர்:-அது தெரிஞ்ச கதைதான்டா. இந்தக் குட்டி யாரு?

முரு:-எம் பொண்ணுங்க.

சேகர்:-உன் பெண்ணு? ஏதோ பெரிய மனுஷன் மகள் மாதிரி இருக்கிறாள்!

முரு:-இருந்தாலும் இருக்கும், நான் என்னத்தைதங்க கண்டேனுங்க.

சேகர்:-என்னடா உளர்றே?

முரு:-உளரலே சாமி. உள்ளதைத்தான் சொல்றேன். இந்தக் காலத்துப் பெரிய மனுஷங்க, தோட்டிச்சியைக் கூடத்தான் விட்றதில்லேயே. என்ன வள்ளி?......

வள்ளி:-இந்தா, சும்மா இருக்கமாட்டே?

சேகர்:-வந்த காரியம் என்னடா?

முரு:-எம் பொண்ணுக்கு ஒரு வேலை வேணுங்க.

சேகர்:-என்ன, தோட்டிச்சி வேலைதானே? முனிசிபல் ஆபீஸுக்கு அப்ளிகேஷன் போடச் சொல்லு பார்ப்போம்.

முரு:-அந்த வேலை இல்லீங்க.

சேகர்:-பின்னே?

முரு:-நர்ஸுக்குப் படிச்சிருக்குது. நம்ம முனிசிபாலிட்டி ஆஸ்பத்திரியிலே ஒரு நர்ஸ் வேலை கொடுத்தீங்கன்னா ரொம்ப புண்ணியமா இருக்கும்.

[கமலா வருகிறாள்.]

கமலா:-என்னப்பா, இவர்களெல்லாம் யார்?

சேகர்:-இவன் நம்ம ஊர் முனிசிபல் குப்பை கூட்ற தோட்டி. அவன் பக்கத்திலே நிக்கிறாளே மைனா, அது அவனுடைய பெண்ணாம். நர்ஸுக்குப் படித்திருக்கிறாளாம், உத்தியோகம் வேணுமாம்.

கமலா:-அவசியம் கொடுக்கணும்ப்பா. இது மாதிரி ஜாதிகளிலே முன்னுக்கு வர்றவங்களைத்தான் ஆதரிக்கணும். உங்க பீரியடுலே இந்த மாதிரி நல்ல காரியங்கள் அவசியம் செய்யணும்ப்பா.

சேகர்:-ஒரு லக்ஷ ரூபாய் செலவு பண்ணி நான் சேர்மனாக வந்திருக்கிறேன். இந்த மாதிரி உதவாக் கரைங்களுக்கெல்லாம் இருக்கிற உத்தியோகத்தைப் பகிர்ந்து கொடுத்துட்டா செலவழிச்ச பணம் தெருவிலே போறதா? ஆத்திலே போட்ட பணத்தை ஆத்திலேதாம்பா எடுக்கணும். குளத்தில தேடினா கிடைக்காது.

கமலா:-நீங்க எங்க வேணுமின்னாலும் தேடுங்க. இந்தப் பெண்ணுக்கு உத்தியோகம் கொடுக்கணுமுன்னுட்டு, நான் சிபார்சு பண்றேன். உங்கள் பதவிக்காலத்திலே, உங்க பெண் செய்யும் முதல் சிபாரிசு.

சேகர்:-அதைத்தானம்மா நானும் நினைக்கிறேன். நான் சேர்மனா வந்து முதன் முதல் இந்தப் பெண்ணுக்குத்தான் உத்தியோக நியமனம் செய்யப் போகிறேன். முதல் காரியத்திலேயே சொந்த ஆதாயம் ஒன்றுமில்லேயே என்று தான் பார்க்கிறேன்.

கமலா:-ஆதாயத்தைக் கருதிப் பொதுக் காரியத்திலே ஈடுபடுகிறது தப்பப்பா.

சேகர்:-உபதேசக் காண்டத்தை ஆரம்பிச்சுட்டியா? இந்த தகப்பன் சாமி வேலைதான் எனக்குப் பிடிக்கிறதில்லை. [எழுந்துக்கொண்டே] உன்னுடைய சிபாரிசு, இந்தப் பெண்ணுக்கு வேலை கொடுக்க வேண்டுமென்பது, அவ் வளவுதானே?

கமலா:-ஆமாம்.

சேகர்:-[முருகனிடம்] அப்ளிகேஷனுடன் நாளைக்கு இந்தப்பெண்ணை ஆபீஸிற்கு வரச் சொல்!

[கமலாவைப் பார்த்து]

சேகர்:-வாம்மா போகலாம்.

[முருகன் காம் குனிக்கிருன். கமலாவும் சேக ரும் உள்ளே செல்கின்றனர்.]

## காட்சி 23

[தோட்டி முருகன் குடிசை. புஷ்பா ஒரு, கை மேஜையின் முன்பு இருந்து எழுதிக் கொண் டிருக்கிருள். நோஞ்சான் வருகிருன்.]

நோஞ்:-அத்தெ இல்லையா புஷ்பா?

புஷ்:-ஊஹூம்!

நோஞ்:-மாமா?

புஷ்:-ஊஹூம்!

நோஞ்:-நீமட்டுந்தானிருக்கியா?

புஷ்:-உம்!

கோஞ்:-என்ன கடுதாசி எழுதுறே?

புஷ்:-காதல் கடிதம்!

கோஞ்:-யாருக்கு?

புஷ்:-உனக்குத்தான்!

கோஞ்:-எனக்கா, எங்கே பார்ப்போம்!

[கவரைக் கையில் பற்றப் போகிறான். கடிதத்தை அவனிடம் கொடுக்க மறுத்து]

புஷ்:-இரு, பார்க்கப் போறியா? படிக்கப் போறியா?

கோஞ்:-எனக்குத்தான் படிக்கத் தெரியாதே!

புஷ்:-அப்பக் கேளு, படித்துக் காட்டுகிறேன். [கடிதத்தைப் படிக்கிறாள்] ம-ா-ா-ஸ்ரீ சேர்மன் அவர்களுக்கு முனிசிபல் ஆபீஸ்......

கோஞ்:-வேலைக்கு மனுப் போடுறியா?

புஷ்:-ஆமா!

கோஞ்:-என்ன வேலை?

புஷ்:-உன்னைப்போல தெருக்கூட்ற வேலைதான்.

கோஞ்:-எந்தத் தெருவைக் கேட்டிருக்கே?

புஷ்:-நீ பெருக்கிற தெருதான்!

கோஞ்:-அப்படிச் சொல்லு. ஏன்னு, நாம ரெண்டு பேரும் சேர்ந்து வேலை செய்யலாம் பாரு. இப்பத்தான் உனக்கு எம்மேலே, கொஞ்சம் கொஞ்சமா ஆசை ஏற்பட்டிருக்கு!

புஷ்:-கொஞ்சம் கொஞ்சமென்ன, நெறையா ஏற்பட்டிருக்குன்னு சொல்லு.

[அசட்டுச் சிரிப்புடன்]

கோஞ்:-அப்படின்னு, எங்கப்பாம்மாகிட்டச் சொல்லி கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யச் சொல்லட்டா?

புஷ்:-கல்யாணத்துக்கு மட்டுமல்ல கருமாதிக்கும் சேர்த்து ஏற்பாடு செய்யச் சொல்லு.

கோஞ்:-என்ன புஷ்பா விளையாடுறே.

புஷ்:-உங்கிட்ட விளையாடமே வேறு யாருகிட்ட விளையாடுறது?

கோஞ்:-அதுக்குள்ள ஒம்மனசு மாறிடுச்சே.

புஷ்:-மனசும் மாறலே, மண்ணும்மாறலே. உள்ளதைத்தான் சொல்றேன். உனக்கும் எனக்கும் கல்யாணமாயிட்டா, அப்புறம் நான் உயிரோடவா இருப்பேன்? தூக்கு மாட்டிக்கிட்டு செத்துப் போயிட மாட்டேன்?

கோ:-நீ என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா செத்துப் போயிடுவேங்கிறே. நா உன்னை கல்யாணம் பண்ணிக் காட்டி செத்துப் போயிடுவேங்கிறே, இதிலே எது நடக்கப் போகுதோ எனக்குத் தெரியலே.

புஷ்:-கவலைப்படாதே, இரண்டும் நடக்காது.

கோஞ்:-அப்படின்னு?

புஷ்:-நீயும் சாகமாட்டே, நானும் சாகமாட்டேன்.

கோஞ்:-அப்பொக் கல்யாணம்?

புஷ்:-நிச்சயம் நடக்கும். ஆனா, உனக்குப் பெண் வேறு ஒருத்தியா இருப்பா. எனக்கு புருஷன் வேறு ஒருத்தனா இருப்பான்.

கோன்:-என்ன புஷ்பா விளையாடுறே.

புஷ்:-உங்கிட்ட விளையாடாமே வேறு யாருட்ட விளையாடுறது?

கோன்:-அப்ப நீ என்னைக் கல்யாணம் பண்ணிக்க மாட்டே..

புஷ்:-நிச்சயமாக.

[கோபமாக]

கோன்:-இந்தச் சேரியிலே என்னையில்லாமே உன்னை எந்தப் பய கட்டுறான்னு பார்க்கிறேன். ஒண்ணு அவனை நா அடிக்கணும், இல்லே அழுணும்.

[அரும்பியிருக்கும் மீசையைத் தடவிக் கொண்டே செல்கிறான்.]

## காட்சி 24

[செல்லத்தின் வீடு. பூஜை அறை. செல்லம் அமர்ந்திருக்கிறாள். அவள் கையில்விரித்தபடி ஒரு கடிதம் இருக்கிறது. அந்தக் கடிதத்தின் வாசகம் முருகன் குரலில் கேட்கிறது.]

குரல்:-அம்மா அவங்களுக்கு முருகன் கும்பிட்டு எழுதிக் கொண்டது. உங்க பொண்ணு பெரிய பொண்ணா வளர்ந்திடுச்சு. நர்ஸுக்குப் படிக்க வச்சிருக்கே. நம்ம சேகரய்யா சேர்மனா ஆயிருக்காரு. புஷ்பாவெ அழைச்சுக்

கிட்டுப் போயி வேலை கேட்டேன். தாறேன்னு சொல்லி யிருக்காரு. இன்னைக்கு நாளைக்குள்ளே வேலை கிடைச்சுடும்னு நெனைக்கிறேன். அவரு பொண்ணுகூடப் பட்டணத்திலே இருந்து வந்திருக்கு. புஷ்பாவுக்கு வேலை கொடுக்கணும்னு சிபாரிசு பண்ணுச்சு. வேறே ஒண்ணும் விசேஷமில்லே.

இப்படிக்கு,
தோட்டி முருகன்

[கடிதத்தைப் படித்து பெருமூச்சு விடுகிறாள் செல்லம். அப்போது]

விநோ:-அத்தை! அத்தை!!

[என்று கூப்பிட்டுக்கொண்டு உள்ளே வருகிறான். செல்லம் கடிதத்தை மறைத்துக் கொண்டு விநோதனைப் பார்த்து]

செல்:-உன்னைப் பார்த்தால் ரொம்பவும் குதூகலத்துடன் காணப்படுகிறாயே, என்ன விசேஷம் விநோதன்?

விநோ:-எனக்கு உத்தியோகம் கிடைத்து விட்டது அத்தை! இப்பொழுதுதான் ஆர்டர் வந்தது. இன்றே புறப்பட வேண்டுமாம்!

செல்:-டாக்டர் உத்தியோகந்தானே?

விநோ:-நல்ல கேள்வி அத்தை. டாக்டருக்குப் படிச்சவனுக்குப் போலீஸ் உத்தியோகமா கிடைக்கும்?

[உள்ளே வந்துக்கொண்டே]

ராஜா:-போலீஸ் உத்தியோகம் என்றால் மிக மட்டம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாயா?

விநோ:-அடடே நீ இருக்கிறதை மறந்து விட்டே னப்பா. ஒரு சப்இன்ஸ்பெக்டர் இருக்கும்போது, போலீஸ் உத்தியோகத்தை மட்டமென்று சொல்லலாமா? அதைக் கேட்டதற்கு விளையாட்டாகச் சொன்னேன், நீ கோபித் துக் கொள்ளாதே.

செல்:-நீங்களிருவரும் ஒரே ஊரில் உத்தியோகம் பார்த்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்?

ராஜா:-அப்பொ என்னம்மா மோசமாப் போச்சு. விநோதன் இருக்கிற ஊருக்கே நானும் வேலையை மாத்திக்கிட் டாப் போச்சு.

விநோ:-உத்தியோகஸ்தர்கள் இடம் மாறுவது ரோட் டிலே கிராஸ் பண்ணுகிறவர்களை நியுசென்ஸ் சார்ஜ் பண்ற மாதிரி நினைச்சுக்கிட்டிருக்காரு சப் இன்ஸ்பெக்டர் ராஜா.

ராஜா:-ஏன்? பேதிக்கு மாத்திரை கொடுக்கிற மாதிரி என்றுதான் வைத்துக் கொள்ளேன்.

செல்:-வயசிலே ரெண்டு பேரும் பெரியவர்களாகி விட் டீங்களே தவிர, உள்ளத்திலே இன்னும் சிறு பிள்ளைகளா கவே இருக்கிறீர்கள். இன்னும் பழைய விளையாட்டுப் புத்தி போகவே இல்லை.

விநோ:-நீ இருக்கிறவரை எங்களுக்கு என்ன அத்தை குறைச்சல். எப்பவும் நாங்க விளையாட்டுப்பிள்ளை களாகத்தானிருப்போம்.

செல்:-உங்க ரெண்டு பேருக்கும் ஒரு பெண்ணைப் பார்த்து கல்யாணம் முடிச்சு வச்சுட்டேன்னா எங்கவலை தீர்ந்தது. அப்புறம் நிம்மதியாகக் கண்ணை மூடிடுவேன்.

விநோ:-அத்தை, ரெண்டு பொண்ணுன்னு சொல்லு. எங்க ரெண்டு பேருக்கும் ஒரு பெண்ணைப் பார்த்து எப்படிக் கல்யாணம் பண்ணி வைப்பே? அதிலேயும் நாங்க ரெண்டு பேரும் மச்சானும் மச்சானும் முறைகூடச் சரியாயில்லையே!

[விநோதனின் முதுகில் தட்டி]

ராஜா:-இடியட், யாரிடத்தில் என்ன பேசுவதென்றே தெரியவில்லை உனக்கு. போய் ஊருக்குப் போறதுக்கு மூட்டை கட்டு போ.

செல்:-கோபித்துக் கொள்ளாதே ராஜா. அவன் இன்னும் விளையாட்டுப் பிள்ளைதானே?

ராஜா:-விளையாட்டு என்னம்மா வேண்டியிருக்கு? நானும் இளைஞன்தானே. விநோதனைப் போலவா நடந்துக் கொள்கிறேன்?

செல்:-நீ சப் இன்ஸ்பெக்டர். கண்டிப்புடன் நடந்துக் கொள்ள வேண்டியவன். ஆகையினால்தான் எதிலும் கண்டிப்பாகப் பேசுகிறாய். அவன் டாக்டர். நோயாளிகளைச் சிரிப்பூட்டியே குணப்படுத்த வேண்டியவன் ஆகையினால் வேடிக்கையாகப் பேசுகிறான். தவறு என்ன இதில்?

ராஜா:-நீங்கள் என்றைக்கும் விநோதன் கட்சிதானமா. நான் சொல்றதை ஆதரிக்கவே மாட்டீர்கள்!

விநோ:-ராஜா, அத்தை என் கட்சி. நான் உன் கட்சி. என்றைக்கும் நீ சொல்றதை ஆதரிக்க நான் தயாரிலிருக்கிறேன். கவலைப்படாதே.

[இருவரும் செல்கின்றனர்.]

## காட்சி 25

[விநோதன் அறை. டாக்டர் உடையில் விநோதன் சேரில் சாய்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருக்கிறான். புஷ்பா நர்ஸ் உடையில் டீ கொண்டுவந்து வைக்கிறாள்.]

புஷ்:-டாக்டர், டீ ஆறிப் போகிறது.

[டீயை எடுத்து ஒரு வாய் பருகிவிட்டு]

விநோ:-இங்கே நீங்களெல்லாம் எப்படி வாழ்கிறீர்கள்?

புஷ்:-என் சார்?

விநோ:-எனக்குப் பொழுதே போகவில்லையே!

புஷ்:-புதிய ஊருக்கு வந்தாலே ஆரம்பத்தில் யாருக்கும் அப்படித்தான் சார் இருக்கும். தனியாக இருக்கிறீர்கள், நண்பர்கள் யாருமில்லை, எனவேதான் பொழுது போகவில்லை. சென்னையைப் போன்ற பெரிய நகரமாயிருந்தால் பீச்சு, சினிமா, டிராமா என்று நினைத்தபடி பொழுது போக்கலாம். இது சின்ன நகரந்தானே.

விநோ:-இங்கே சினிமா தியேட்டரே இல்லையா?

புஷ்:-இரண்டு தியேட்டர் இருக்கிறது. இரண்டும் பழைய காலத்துத் தகரக் கொட்டகைகள்.

விநோ:-என்ன படம் நடக்கின்றது?

புஷ்:-ஒன்றில் நல்ல தங்கா, மற்றொன்றில் அரிச்சந்திரா.

விநோ:-நல்ல படம். அழுக ஆசைப்பட்ட அதிர்ஷ்டசாலிகள் போய்ப் பார்க்கலாம்.

புஷ்:-குடும்பத்தை அழைத்து வந்திருந்தால் இவ்வளவு அவஸ்தை இருக்காது பாருங்கள். ஆபீஸ் வேலை அது முடிந்ததும், வீட்டில் இன்பமாகப் பொழுதுபோகும் ஆனந்தமாக இருக்கலாம் அல்லவா?

விநோ.-குடும்பத்தினர் என்றால் யார்?

புஷ்:-மனைவி, மக்கள்......

விநோ:-பேரன், பேத்தி, ஆடு, மாடு.

புஷ்:-ஏன் சார், உங்களுக்கு மணமாகவில்லையா?

விநோ:-நன்றாய்ச் சொன்னீர்கள். எனக்குத் திருமணமாகி எவ்வளவோ காலமாகி விட்டது. என் பேத்திக்குத் தானிப்போது வரன் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

புஷ்:-என்ன சார் பரிகாசம் பண்ணுகிறீர்கள்!

விநோ:-பரிகாசமில்லை மிஸ்டர், உண்மை.

புஷ்:-போங்க சார். கேப்பையிலே நெய் ஒழுகுதுன்னு கேட்பாருக்கு மதி இருக்க வேண்டாமா?

விநோ:-மதியாவது மண்ணாங்கட்டியாவது? பொய்யை நாலுதரம் அழுத்திச் சொன்னால் அதுவே மெய்யாகி விடுகிறதென்பது கோயபெல்ஸ் சித்தாந்தம் மிஸ்டர்!

புஷ்:-சார், என்னைத் தயவுசெய்து மிஸ்டர் என்று சொல்ல வேண்டாம், புஷ்பா என்று பெயர் சொல்லி அழைத்தாலே போதும்

விநோ:-காரணம்?

புஷ்:-நான் உங்களைவிடச் சிறியவள், மேலும் தாழ்ந்த ஜாதிக்காரி, தோட்டிப் பெண்!

[ஆச்சரியம் அடைந்தவனாக]

விநோ:-உண்மையாகவா. நீங்கள் தோட்டிப்பெண்ணா?

புஷ்:-உங்களுக்கு மருந்து எடுத்து வந்து கொடுப்பதற்கு முன்பே இதைச் சொல்லியிருக்க வேண்டும். தவறிவிட்டேன்......

விநோ:-அதனால் ஒன்றும் கெட்டுவிடவில்லை எனக்கு இந்த ஜாதி நம்பிக்கையெல்லாம் கிடையாது. மேலும், தோட்டி என்றொரு ஜாதி, துரைத்தனத்தார் என்றொரு ஜாதி என்று இருந்த நிலையெல்லாம் மாறிவிட்டது. நாமெல்லாம் ஒரே ஜாதி. இந்தியா என்ற ஏகக்குடும்பத்தின் மக்கள், என்ற உயர்ந்த கொள்கை பாவிவரும் சகாப்தத்திலே வாழ்கிறோம். தயவுசெய்து தாழ்ந்த ஜாதி என்ற மனப்பான்மையை இன்றிலிருந்து விட்டு விடுங்கள். நீங்கள் கொடுத்ததினால் தேநீரின் சுவை குன்றியிருக்கவில்லை. அதிகச் சுவையுடையதாகவே இருந்தது.

புஷ்:-அதிகச் சுவையாக இருந்ததற்குக் காரணம்?

விநோ:-மாலை நேரம். அதிக வேலையால் களைப்புற்றிருந்தது என் மனம். எழில் ததும்பும் உன் கரத்தால் தேநீர் வழங்கினாய். இந்த மருந்து இனிமையாக இருப்பதற்கு இதை விட வேறு காரணம் வேண்டுமா? உன்னை நர்ஸாக நியமித்தவர்கள் புத்திசாலியாக இருக்க வேண்டும். நோயாளிக்கு உனது முகத்தைப் பார்த்தாலே நோய் குணமாகிவிடும்.

புஷ்:-......

[டெலிபோன் மணி அடிக்கிறது. புஷ்பா ரிஸீவரைக்காதில் எடுத்து வைத்துக் கேட்கிறாள்.]

புஷ்:-ஹலோ, யாரது, ஆமா, இருக்கிறார், சொல்கிறேன்.

[ரிஸீவரைக் கீழே வைத்துவிட்டு]

புஷ்ப-டாக்டர் சார், சேர்மன் பெண் கமலாவிற்கு உடம்பிற்குச் சுகமில்லையாம். கார் அனுப்பியிருக்கிறார்களாம். உடனே நீங்கள் வர வேண்டும் என்கிறார்கள்.

[எழுந்து கொண்டு]

விநோ:-நல்லது நான் போய் ஒரு நொடியில் திரும்பி வந்து விடுகிறேன்.

[எழுந்து வெளியே வருகிறான். மோட்டார் ஹாரன சப்தம் கேட்கிறது.]

## காட்சி 26

[கமலா கட்டிலில் படுத்து முனகிக் கொண்டிருக்கிறாள். விநோதன மருந்துப் பெட்டியுடன் உள்ளே நுழைகிறான்.]

விநோ:-வேதனை அதிகமாக இருக்கிறதா?

கமலா:-அதெல்லாம் ஒன்றுமில்லை சார். அப்பாவுக்கு என்னிடத்தில் அதிகப்பிரியம். அவருக்கு நான் ஒரே பெண் என்ற காரணம். எனக்கு ஏதாவது ஒன்று என்றால் துடியாய்த் துடித்து விடுவார். டாக்டரைக் கூப்பிட்டு, ஆப்ரேஷன் செய், இன்ஜெக்ஷன் போடு என்றெல்லாம் அலறி விடுவார். அதிலே இன்றைய நிகழ்ச்சியும் ஒன்று.

[சிரித்துக்கொண்டு]

விநோ:-நல்லி தந்தை.

கமலா:-உண்மையிலேயே அவர் நல்ல தந்தைதான் மிஸ்டர்.

விநோ:-தங்களுக்கு இப்பொழுது என்ன செய்கிறது?

கமலா:.சாதாரணத் தலைவலி.

[பெட்டியைத் திறந்து ஏதோ பவுடரை எடுத்து மடித்துக் கமலாவிடம் கொடுத்து]

விநோ:-இதை வெந்நீரில் சாப்பிடுங்கள்.

[அதை வாங்கிக்கொண்டு]

கமலா:-தாங்ஸ்.

விநோ:-நான் வரட்டுமா?

கமலா:-இருங்க மிஸ்டர். காபி சாப்பிட்டுவிட்டுப் போங்கள்.

விநோ:-பரவாயில்லை நான் வருகிறேன்.

கமலா:-இல்லை அவசியம் சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டும்.

விநோ:-இதற்குப் பெயர் உபச்சாரமா? உபத்திரவமா?

கமலா:-இரண்டுந்தான்.

[கமலா பெல் அடிக்கிறாள். காபிகொண்டுவந்து ஒருவன் வைக்கிறான். கமலாவும் விநோதனும் அருந்துகிறார்கள்.]

விநோ:-இந்த ஊரில் நல்ல நண்பர்களில்லையென்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன்.

கமலா:-இப்பொழுது?

விநோ:-ஓரளவு ஆறுதல்.

கமலா:-கல்லூரியில் அரட்டையும் கூத்துமாக இருந்தவர்களுக்கு தனித்திருப்பதென்றால் முடியாத காரியம்தான்.

விநோ:-தாங்கள் கல்லூரியில் படிக்கிறீர்களா? எந்த ஊரில்? எந்த வகுப்பு?

கமலா:-சென்னையில் பி. ஏ. படிக்கிறேன்.

[சேகர் வருகிறார்.]

சேகர்:-என்னம்மா, உடம்பு எப்படி இருக்கிறது?

கமலா:-முற்றிலும் குணமாகி விட்டதப்பா. இவர் நல்ல கைராசிக்காரர். வந்து பார்த்தார், மருந்து கொடுத்தார், உடனே குணமாகி விட்டது.

[விநோதன் கையை பிடித்துக் குலுக்கி]

சேகர்:-நான் உங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். புழுப்போல் துடித்துக் கொண்டிருந்த பெண்ணை இவ்வளவு சீக்கிரத்தில் குணப்படுத்தி விட்டீர்களே! துடுக்குக்காரப் பெண், சொலவதைக் கேட்பதே இல்லை. எதை யாவது செய்து அடிக்கடி நோய் வரவழைத்துக் கொண்டிருப்பதுதான் வேலை. இனி நீங்கள்தான் எங்கள் குடும்ப டாக்டர். இவளைக் கவனித்துக் கொள்ள வேண்டியது உங்கள் பொறுப்புத்தான்.

விநோ:-ஆகட்டும் சார்.

சேகர்:-கமலா, இவர் நமது முனிசிபல் ஆஸ்பிட்டலுக்கு புதிதாக வந்திருக்கும் டாக்டர். நீ கூப்பிட்டனுப்பும் போதெல்லாம் வருவார்!

கமலா:-நல்லதப்பா.

வினோ:-வருகிறேன் சார்.

கமலா:-அப்பா, நாம இவருக்கு ஒரு விருந்து வைக்கணுமே

சேகர்:-தாராளமாய், இன்னைக்கே ஏற்பாடு செய்யேன். ஏன் டாக்டர், உங்களுக்குச் சம்மதந்தானே?

வினோ:-மன்னிக்க வேண்டும். இன்னொரு நாளைக்கு வைத்துக் கொள்ளுங்கள் அவசியம் வருகிறேன். போய் வரட்டுமா?

[டாக்டர் கையை சேகர் குலுக்குகிறார். கமலா கரம் குவித்து வணங்குகிறாள்.]

## காட்சி 27

[வினோதன் அறை. மேஜையின்மீது இருக்கும் சாமான்களை ஒழுங்குபடுத்திவைத்துக்கொண்டிருக்கிறாள் புஷ்பா. வினோதன் வருகிறான்.]

புஷ்:-என்ன டாக்டர், அதற்குள் திரும்பிவிட்டீர்கள்?

[சட்டையைக் கழட்டிக்கொண்டே]

வினோ:-அங்கு யாருக்கும் ஒருவித நோயும் இல்லை. சேர்மன் மகளுக்குத் தலைநோவு, அதைப் பிரமாதப்படுத்தியிருக்கிறார் அவர்

[சட்டையைப் புஷ்பாவிடம் கொடுக்கிறான். அவள் அதை வாங்கி ஸ்டாண்டில் மாட்டிக்கொண்டே]

புஷ்:-பெரிய மனிதர்கள் வீட்டில் இது சகஜம்தானே டாக்டர். சின்னதைப் பெரிசாகப் பேசுவார்கள். பெரிய விஷயத்தை ஒன்றுமில்லாததுபோல் விட்டுவிடுவார்கள்.

[டெலிபோன் மணி அடிக்கிறது. ரிஸீவரைக் கையில் எடுத்துக் கேட்கிறான் விநோதன்.

விநோ:-யாரது, கமலாவா? மீண்டும் உடம்புக்குக் குணமில்லையா? நான் வர வேண்டுமா? [ரிஸீவரைக் கீழே வைத்துவிட்டு] நல்ல வேடிக்கை!

புஷ்:-என்ன டாக்டர்?

விநோ:-கமலாவுக்கு மறுபடியும் உடம்பிற்கு என்னவோ செய்கிறதாம். நான் உடனே வர வேண்டுமாம். அவளே போன் செய்கிறாள்.

[சட்டையை அணிந்துக் கொள்கிறான்.]

புஷ்:-போகப் போகிறீர்களா டாக்டர்?

விநோ:-போகாமல் என்ன செய்வது? சேர்மன் மகள். ஆஸ்பத்திரி நிர்வாகம் அவள் அப்பா கையில் இருக்கிறதே!

புஷ்:-......

[வாசலில் மோட்டார் ஹாரன் சப்தம் கேட்கிறது. மருந்துப் பையுடன் வெளியேறுகிறான்.]

## காட்சி 28

[முருகன், குடிசை வாசலில் கயிற்றுக் கட்டிலில் அமர்ந்திருக்கிறான். வள்ளி டிபன் கேரி

யரை கொண்டுவந்து ஆத்திரத்துடன் கீழே வைக்கிறாள்.]

முரு:-ஏன் வள்ளி, என்ன நடந்தது?

வள்ளி:-என்ன நடக்கணும்? அந்தக் குட்டி, கொண்டு போற சோத்தை ஒழுங்காத் திங்கறதே இல்லே. ஆளைப் பாத்தா பேயறஞ்சவ மாதிரி இருக்கா. அந்த டாக்டர் வந்ததிலிருந்து, குட்டிப்போட்ட பூனை மாதிரி அவர் அறையைச் சுத்தி சுத்தி வர்றதுதான் வேலையாயிருக்கு. இது என்னமோ எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கல்லே.

முரு:-அவரு ஊருக்குப் புதிசு. பேச்சுத் தொணைக்கி ஆளு இருக்காது. சும்மா போய் பேசிக்கிட்டு இருந்திருப்பா. இதெயெல்லாம் ஒரு குற்றமுன்னு சொல்லுறியே!

வள்ளி:-இந்த மாதிரியெல்லாம் வருமுன்னுதான் அப்பவே இந்தக் குட்டியைப் படிக்க வைக்க வேண்டாம் நம்ம ஜாதித்தொழிலே பார்க்கட்டும்னு சொன்னேன். கேட்டியா நீ?

முரு:-புஷ்பா என்ன நம்ம வீட்டுப் பொண்ணு, நம்ம இஷ்டப்படி செய்யறதுக்கு? அந்தம்மா பெத்து உன் கையிலே தந்துட்டுப் போனாங்க, நீ வளத்தே. அதுவும் சும்மா இல்லே. மாசா மாசம் பணம் அனுப்பிச்சுக்கிட்டிருந்தாங்க, இன்னும் அனுப்பிக்கிட்டு வாறாங்க. இந்த லக்ஷணத்திலே நீ யென்னத்துக்குடி அடிச்சுக்கிறே?

வள்ளி:-நம்ம பொண்ணாயிருந்தாக்கூட நா ஒண்ணும் சொல்லப் போறதில்லே. ஊரா வீட்டுப் பொண்ணு. அவுங்க கையிலே ஒப்படைக்கிற வரையிலும், கெட்ட பேரு வாராமே நாமதானே பாதுகாக்கணும்?

முரு:-இப்ப ஒண்ணும் கெட்டுப்போகல்லே. டாக்டர் வந்திருக்கிறவரு யாரு தெரியுமில்ல?

[ஆவலுடன்]

வள்ளி:-யாரு?

முரு-செல்லத்தம்மா அண்ணெ மவனுக்கும்!

வள்ளி:-அ! இங்கே இத்தனூண்டு வாண்டா வந்திருந்திச்சே, அந்தப் புள்ளெயா?

முரு:-அவனே தா!

வள்ளி:-நா நல்லாக்கூட பாக்கல்லியே!

முரு:-பாக்காதனாலே ஒண்ணும் கெட்டுப் போயிடலே. நீ பாட்டிலே இந்த விஷயத்தை யாரிடத்திலும் உளறி வைக்காதே. நம்ம புஷ்பாவுக்குக்கூடத் தெரியப்படாது. இது என் உத்தரவு மட்டுமில்லே, செல்லத்தம்பாளே இப்படிக் கடுதாசி எழுதியிருக்காங்க!

[கோஞ்சான் வருகிறான்.]

கோஞ்:-மாமா!

முரு:-என்னடா?

கோஞ்:-இந்தா பாரு நிக்கில்ஸ்.

முரு:-யாருக்குடா?

கோஞ்:-நம்ம புஷ்பாவுக்குத்தா!

முரு:-பலே பேஷ்! அது கழுத்திலே போட்டு காலிலே விழுந்து கும்பிடப் போறியா?

வள்ளி:-சும்மா இல்லே, மூணு நாஞ் சுத்திவந்து கும்பிடப் போறாரு.

கோஞ்:-போ அத்தே! புஷ்பாகிட்டே இதெக்கொடுத்து, என்னெக் கட்டிக்கப் போறியா இல்லியான்னு கேக்கப் போறே!

[கோஞ்சானைத் தட்டிக் கொடுத்தபடி]

முரு:-சபாஷ், இதுதா புத்திசாலித்தனம். புஷ்பாவுடைய சம்மதத்தை வாங்கிடு, அடுத்த நாளே உங்க ரெண்டு பேருக்கும் கல்யாணத்தெநானே செஞ்சு வச்சிடுறே!

கோஞ்:-பலே மாமா! இப்பவே போறேன். புஷ்பா கால்மேலே விழுந்தாவது அவ சம்மதத்தெ வாங்கிடுறே.

முரு:-போ மாப்பிளே, ஆஸ்பத்திரியிலேதா இருக்கா. புஷ்பா சம்மதிக்காது போனாலும், ஒம்பைத்யமாவது தெளியும். எல்லா அது ஆஸ்பத்திரி பாரு!

## காட்சி 29

[விநோதன் அறை. சுவற்றில் அவன் படம் மாட்டப்பட்டிருக்கிறது. அதைக் கையில் எடுத்து வைத்துக்கொண்டு, அவன் தனக்குக்கிட்டுவானா என்ற கருத்துப்பட பாடுகிறாள். பாட்டு முடிந்ததும் கோஞ்சான் வருகிறான்.]

கோஞ்:-புஷ்பா!

[படத்துடன், கையில், வைத்திருக்கும் போட்டோவை மேஜையின்மீது வைத்து விட்டு, திரும்பிப் பார்க்கிறாள் புஷ்பா.]

கோஞ்:-புஷ்பா, குஷியா பாடிக்கிட்டு இருக்கியே, இதுக்குத்தா உனக்கு இங்கே சம்பளம் கொடுக்கிறாங்களா?

புஷ்:-இல்லே, அழுகச் சொல்லி சம்பளம் கொடுக்கிறாங்க!

கோஞ்:-பின்னே ஏன் நீ அழுகலே?

புஷ்:-நீ வரல்லியேன்னுதான் பார்த்துக்கிட்டு இருந்தேன்.

கோஞ்:-நான் வந்தா?

புஷ்:-ரெண்டு பேரும் சேர்ந்து அழுகலாம் பாரு!

கோஞ்:-என்ன புஷ்பா விளையாடுறே.

புஷ்:-உங்கிட்ட விளையாடாமே வேறு யாருகிட்ட விளையாடுறது?

கோஞ்:-இதோ பாரு நிக்கிலஸ்!

புஷ்:-எங்கே திருடினே?

கோஞ்:-திருடலே, காசுக் கடையிலே வாங்கினே!

புஷ்:-எத்தனை ரூபாய்?

கோஞ்:-இந்த மாதச் சம்பளத்தெ அப்படியே கொடுத்து வாங்கினே!

[நெக்லஸைக் கையில் வாங்கிக்கொண்டு]

புஷ்:-இந்த மாதிரி நெக்லஸ்கூடக் காசுக் கடையிலே விக்கிறாங்களா?

கோஞ்:-ஓ, இதுவும் அசல் பவுன் மாதிரிதா. கருக்கவே கருக்காது.

புஷ்:-இதை, நீயே கழுத்திலே போட்டுக்கோ.

[அவன் கழுத்தில் போடப் போகிறான்.]

கோந்:-என்ன புஷ்பா விளையாடுறே?

புஷ்:-உங்கிட்டே விளையாடாமே வேறு யாருகிட்ட விளையாடுறது?

கோந்:-இந்த மாசச் சம்பளத்தே அப்படியே குடுத்து நெக்கிலஸ் வாங்கிட்டு வந்திருக்கேக, அப்பக்கூட உம்மனசு இரங்கலியே!

புஷ்:-மனசு இரங்கினதினாலேதான், இத்தனை நாளும் உன்னை ஒண்ணும் செய்யாமெ விட்டிருக்கேன்.

கோந்:-ஹை, என்ன செஞ்சிடுவியாம்?

புஷ்:-என்ன செய்வேனா?

[போனை எடுத்து ரிங் செய்து]

புஷ்:-ஹலோ!

கோந்:-இரு, இரு. யாரெக் கூப்பிடுறே?

புஷ்:-ஹலோ!

கோந்:-இப்போ நான் என்ன சொல்லிப்பிட்டேன்? ஒரே அடியா கோவிச்சுக்கிட்டுப் போன் பண்றியே!

புஷ்:-அட சீ, போ!

கமலா:-யாரது இடியட்! போனில் சீ போ என்று பேசுவது?

புஷ்:-ஐயாம் ஸாரி. அங்கே டாக்டர் இருக்காரா?

கமலா:-இருக்கார், ஏன்?

புஷ்:-அவரைக் கொஞ்சம் பேசச் சொல்லுங்கள்.

கமலா:-என்ன தெரிய வேண்டும்? சொல்லுங்கள் நானே கேட்டுச் சொல்கிறேன்.

புஷ்:-அவர் எப்போது இங்கே வரப் போகிறார்?

கமலா:-அவர் இப்போது வரமாட்டார், இன்னுங் கொஞ்சம் நேரமாகும்!

[புஷ்பா ஆத்திரத்துடன் போனைக் கீழே வைக்கிறாள். விநோதனைப் பார்த்து]

கமலா:-யாரோ ஆஸ்பிட்டல் நர்ஸாம், நீங்கள் எப்போது வருவீர்கள் என்று கேட்டாள்.

[தட்டிலிருக்கும் பலகாரத்தை வாயில் போட்டுக்கொண்டே]

விநோ:-என்ன பதில் சொன்னீர்கள்?

கமலா:-அவர் இப்போது வரமாட்டார் என்று சொன்னேன்.

விநோ:-நல்ல ஏற்பாடு!

[கமலாவும் விநோதனும் சிரிக்கிறார்கள்.]

## காட்சி 30

[ரோடு. சேகர், ச. க, முத்து ஆகிய மூவரும் வருகின்றனர். ஒரு பையன் வந்து சேகரிடம்]

பையன்:-ஐயா, சேர்மன் உருவத் திறப்பு நிதிக்கி காசு போடுங்க.

ச. க.:-யார்டா? போடா எட்டி!

முத்து:-டேய்!

சேகர்:-சும்மா இருங்க. எந்த சேர்மன் உருவத்தைத் திறக்கிறாங்க? எந்த ஊரிலே திறந்து வைக்கப் போறாங்க?

பையன்:-இந்த ஊரிலேதாங்க, பார்க்கிலே நம்ம சேர்மன் உருவத்தெ திறந்து வைக்கப் போறாங்க. [முத்துப் பண்டாரத்தைச் சுட்டிக்காட்டி] இந்த ஐயாதா அதுக்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் செஞ்சுக்கிட்டு வாறாரு. உத்தம தியாகி சேர்மன்ஐயா ஒத்தாசையில்லேன்னு, போன சண்டையிலே வெள்ளைக்காரர ஜெயிச்சிருக்க முடியாதுங்க.

முத்து:-டேய் இவருதாண்டா முனிசிபல் சேர்மன், அவருகிட்டேயே போயி கதை அளக்கிறியே.

சேகர்:-அதனாலே என்னாங்க. பையன் உள்ளதைத் தானே சொல்கிறான்? ரொம்ப கெட்டிக்காரன். ஏண்டா, இந்த உண்டியலிலே இருந்து தினம் நீ எவ்வளவு எடுத்துக் கொள்வே?

பையன்:-அதெல்லாம் ஒண்ணுமில்லிங்க. வசூலான பணத்தை ஐயாக்கிட்டே [முத்துவைக் காட்டி] கொடுத்து விடுவேனுங்க. அவரு ரெண்டணா கொடுப்பாரு, அவ்வளவு தாங்க.

சேகர்:-பேஷ், நீ ரொம்ப நல்ல பையன்.

[பாக்கெட்டிலிருந்து ஒரு ரூபாய் எடுத்து வைத்துக்கொண்டு, ச. க.வைப் பார்த்து]

சேகர்:-உம், உங்கள் பங்கு ஆகட்டும.

ச. க.:- இதிலுமா விகிதாசாரம்?

[என்று கூறிக்கொண்டே உண்டியலில் ஒரு ரூபாய்போட, சேகரும் போடுகிறான். பையன் இருவரையும் கும்பிடுகிறான். அவனைத் தட்டிக் கொடுத்து]

சேகர்:- எல்லோரிடத்திலும் கேளு, கூச்சப்படாதே! மாலையில் வீடு திரும்பும்பொழுது, உண்டியல் நிறைந்திருக்கணும் என்ன?

[பையன் தலையை ஆட்டுகிறான். மூவரும் செல்கிறார்கள். அவர்கள் சென்றதும், உண்டியலைத் தலைகீழாகக் கொட்டுகிறான். ஒரு ரூபாய் நாணயம் விழுகிறது, கையில் எடுத்துச் சுண்டிக்கொண்டே நடையைக்கட்டுகிறான்.]

## காட்சி 31

[பார்க்கு. விநோதன் ஓர் மேடைமீதமர்ந்திருக்கிறான். சிறிது நேரத்தில் அந்த வழியாக நர்ஸ் உடை அல்லாத சாதாரண உடையில் புஷ்பா செல்கிறாள். அவளைப்பார்த்ததும்]

விநோ:- புஷ்பா! புஷ்பா!!

[புஷ்பா திரும்பிப் பார்த்துவிட்டு, தலைகுனிந்தபடி செல்கிறாள். விநோதன், மேலும் அவள் செல்லமுடியாதபடி • முன்சென்று • தடுத்து நிறுத்தி]

விநோ:- ஏன் புஷ்பா, என்மீது உனக்குக் கோபமா?

புஷ்:-இல்லையே!

விநோ:-பின் ஏன் ஒரு வாரமாக நீ டியூட்டிக்குக்கூட வரவில்லை?

புஷ்:-உடம்பு சரியாயில்லை.

விநோ:-உடம்பு சரியாயில்லையா? உள்ளம் சரியாயில்லையா?

புஷ்:-எதுவாயிருந்தால் என்ன? நான்தான் லீவு லெட்டர் எழுதி அனுப்பியிருக்கேனே?

விநோ:-நானுன்னை மேலதிகாரி என்ற முறையில் கேட்கவில்லை. தனிப்பட்ட முறையில் கேட்கிறேன்.

புஷ்:-தனிப்பட்ட முறையில் என்மீது அன்பு செலுத்த நீங்கள் யார்?

விநோ:-நான் யார் என்பதை உன் உள்ளத்தைக் கேள் சொல்லும்.

புஷ்:-என் உள்ளம் சதா என்னிடம் சொல்லிக் கொண்டுதானிருக்கிறது.

விநோ:-என்ன சொல்லுகிறது? நான் நல்லவனென்று தானே?

புஷ்:-இல்லை! நீ தாழ்ந்த ஜாதிக்காரி, அவர் உயர்ந்த ஜாதிக்காரர், அவர் கூட்டுறவு உனக்குக் கூடாது என்று எச்சரித்துக் கொண்டிருக்கிறது.

விநோ:-பொய் பொய். உன் உள்ளம் எனக்கு நன்றாய் தெரியும். அது ஒருபோதும் அப்படிச் சொல்லாது. டாக்டர் விநோதன் ஜாதி வெறியரல்ல, உனக்கேற்ற

காதலன், 'நிச்சயம் உன்னைக் கல்யாணம் செய்து கொள்வார், நீ பயப்படாதே என்கிறது. நீயதை மறைக்கிறாய்.

புஷ்:-ஒரு காலத்தில் அப்படிச் சொல்லிக் கொண்டிருந்தது உண்மைதான். ஆனால், இன்று அப்படிச் சொல்லவில்லை.'

விநோ:-வேறு எப்படிச் சொல்கிறது?

புஷ்:-அவர் கமலாவிற்குச் சொந்தம், நீ அவரை மறந்துவிடு என்று எச்சரிக்கிறது.

[அவள் கரங்களைப் பற்றிக்கொண்டு]

விநோ:-நீ என்னை மறந்து விட்டாயா?

புஷ்:-இல்லை, மறக்க முயற்சிக்கிறேன்.

விநோ:-மறக்க முடியாது. நீ அந்த முயற்சியை விட்டுவிடு. கமலா ஒரு கானல் நீர். அவளை நம்பி [புஷ்பாவின் கன்னத்தைத் தட்டியவாறு] இந்த அமுதத்தை இழந்துவிடமாட்டான் விநோதன்.

புஷ்:-இதே வார்த்தையைத்தான் கமலாவிடமும் கூறியிருப்பீர்கள். அவளிடம் கூறும்பொழுது, கமலா என்பதற்குப் பதில் புஷ்பா என்று கூறி இருப்பீர்கள்.

விநோ:-வீண் சந்தேகம் வேண்டாம் புஷ்பா. அடுத்த மாதம் முதல் தேதி, என் அத்தையும் ராஜாவும் இங்கே வருகிறார்கள். ஜாகைக்கு இடமெல்லாம் 'பார்த்துவிட்டேன். அவர்கள் வந்ததும் உனக்கும் எனக்கும் திருமணம், இது மெய். [அவள் கையிலடித்து] சத்தியமாக!

[அவன்மேல் சாய்ந்தவாறு]

புஷ்:-வீணாக உங்கள்மீது சந்தேகப்பட்டு விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்.

[வினோதன் அவளை அணைத்துப் பிடித்துக் கொண்டு, சுற்றிலும் பார்க்கிறான்.]

புஷ்:-என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?

வினோ:-தடாகம் இருக்கிறதா என்று பார்க்கிறேன்.

புஷ்:-எதற்காக?

வினோ:-சினிமாவிலே, இந்த மாதிரிக் கட்டத்தில், காதலர்கள் சந்திக்கும்பொழுது, தடாகக் கரையிலமர்ந்து, தண்ணீரைக் காலால் எற்றியவாறு, டூயட் பாடுவார்கள். அதைப் போல பாடலாமா என்று தோன்றுகிறது எனக்கு.

புஷ்:-பாடக்கூடத் தெரியுமா உங்களுக்கு?

வினோ:-ஓ, பாடுவேன்! ஆனால், சுருதியும் தாளமும்தான் என்னுடன் ஒத்துவராது!

புஷ்:-அப்படியானால், அந்தப் பாட்டைப் பார்க்குந்து பாடக்கூடாது. வாருங்கள் ரூமிற்குச் செல்லலாம்.

[இருவரும் செல்கின்றனர். அங்குள்ள மரம் ஒன்றில் அமர்ந்திருந்த ஜோடிப் புறாக்கள் முத்தமிட்டுக் கொள்கின்றன.]

## காட்சி 32

[வினோதன் ஒரு சேரில் அமர்ந்து மற்றொரு சேரில் காலை வைத்து ஆனந்தமாக விஸி

லடித்துக்கொண்டிருக்கிறான். கமலா சோர்ந்து போய் வருகிறாள்.]

வினோ:-ஏன் என்னவோ போலிருக்கிறாய்?

கமலா:-கீழே இந்நேரம் அப்பாவுடன் தர்க்கம்!

வினோ:-எதைப்பற்றி?

கமலா:-திருமண விஷயமாக.

வினோ:-என்ன சொன்னாய்?

கமலா:-முடியாதென்று சொல்லிவிட்டேன்.

வினோ:-சண்டாளி! அப்படியென்றால் என்னை இது வரை நீ பொய்யாகத்தான் காதலித்தாயா?

[கமலா சிரிக்கிறாள். அவளைப் பிடித்துக் குலுக்கியவாறு]

வினோ:-சிரித்து என்னை மயக்கவிட முடியாது.

கமலா:-அப்பாவுடன் பேசியது நம் திருமணம் பற்றியல்ல. வேறு யாரையோ நான் மணந்துக் கொள்ள வேண்டுமென்றார். முடியாதென்று மறுத்துவிட்டேன்.

வினோ:-அப்புறம்?

கமலா:-நம் காதலைப்பற்றிச் சொன்னேன். திருமண மென்றால் அது வினோதனுடன்தான் நடைபெற வேண்டு மென்றேன். மறுத்தார், அழுதேன்! சம்மதித்தார், சொல்ல ஓடோடியும் வந்தேன்.

வினோ:-அப்பாடி, பிரீதிக் கல்யாணம் முடிந்தது.

கமலா:-அப்படியென்றால்?

வினோ:-உங்கப்பா சம்மதித்து விட்டார். என் அத்தை சம்மதிக்க வேண்டுமே!

[ஆத்திரத்துடன்]

கமலா:-சம்மதிக்காவிட்டால்?

வினோ--சம்மதித்தாலும், சம்மதிக்காவிட்டாலும் திருமணம் நடந்தே தீரும். எதற்கும் ஒரு வார்த்தை கேட்க வேண்டாமா?

கமலா:-எப்பொழுது கேட்பது?

வினோ:-இன்றுதானே வந்திருக்கிறார்கள். இன்னும் ஒரு வாரத்தில் கேட்டு முடிவு சொல்லுகிறேன்.

கமலா:-மிஸ்டர் வினோதன். நான் படித்த பெண். என்னை ஏமாற்ற முடியாது. நீங்கள் என் கழுத்தில் மாங்கல்யம் புனைய வேண்டும். இல்லையேல் வருந்திக்கொண்டே கட்டும் வழியைச் செய்ய எனக்குத் தெரியும்.

[நடுங்கிப் பின் சமாளித்துக்கொண்டு, கரத்தைப் பற்றியவாறு]

வினோ:-என்ன கமலா, இப்பொழுது என்ன நடந்து விட்டது? ஏன் இப்படிக் கோபித்துக் கொள்கிறாய்?

கமலா:-கோபித்துக் கொள்ளாமல் உங்கள் பதிலைக் கேட்டு சந்தோஷமா படமுடியும்? அப்பா விலைப்பண்டமாக நினைத்து வேறு ஒருவனுக்கு மணமுடிக்க விலை பேசுகிறார். அதை ஒருவிதமாகச் சமாளித்துக்கொண்டு உங்களிடம் வந்தால், நீங்கள் அலக்ஷியமாகப் பதிலளிக்கிறீர்கள்.

வினோ:-உன் மனம் கொதித்துக் குழம்பி இருக்கிறது. வா வெளியே உலாவப் போய் வரலாம்.

[இருவரும் செல்கின்றனர்.]

## காட்சி 33

[குடுமி கட்டியிருந்த நோஞ்சான், அரைகுறை யாகக் கிராப் வாரி, சூட்டும் கோட்டுமாகக் காட்சியளிக்கிறான். புஷ்பா ரோட்டில் சென்றுக்கொண்டிருக்கிறாள். அவள் பின்னால் சென்று]

நோஞ்.-புஷ்பா !

[திரும்பிப் பார்க்கிறாள்.]

நோஞ்:-உன்னை எங்கேயெல்லாம் தேடிப்பாக்றது ?

[சிரிக்கிறாள்.]

நோஞ்:-என்ன சிரிக்கிறே ?

புஷ்:-பிரமாதமா அவலக்ஷணப்படுத்திக்கிட்டிருக்கியே இது என்ன கூத்து ?

நோஞ்:--அவலக்ஷணப்படுத்திக்கிட்டு இருக்கேனா? அலங்காரப்படுத்திக்கிட்டிருக்கேன்னு சொல்லு.

புஷ்:-இதுக்குப் பேரு அலங்காரமா? எந்த மடையன் சொன்னது ?

நோஞ்--நான்தான் சொல்றே, வேறு யாரு சொல்லனும் ?

புஷ்:-வேறே யாரும் சொல்ல முடியாது.

நோஞ்:-அதுதானே கேட்டேன்.

புஷ்:-ஆமா, இப்படி அவலக்ஷணப்படுத்திக்கிற, இல்லே, அலங்காரப்படுத்திக்கிற உனக்கு எப்படித் தோணுச்சு?

கோஞ்:-குடுமி வச்சுக்கிட்டு, நம்ம குல ஆச்சாரப்படி இருக்கிறதுதான் உனக்குப் பிடிக்கல்லியே! "குடுமியை எடுத்துட்டு கிறாப் வச்சுக்கோ, சூட்டும் கோட்டும் போட்டுக்கோ, புஷ்பா படிச்ச பொண்ணு. அப்பத்தான் அவ உன்னைக் கல்யாணம் பண்ணிக்குவா"ன்னு மாமா சொன்னாரு. உடனே கிறாப் வெட்டிக்கிட்டு, சூட்டும் கோட்டும் போட்டுகிட்டு வந்திட்டேன்.

புஷ்:-ஆமா, இதெல்லாம் எங்கே இரவல் வாங்கினே?

கோஞ்:-எந்தப் பய இரவல் கொடுக்கிறேங்கிறா? வாடகைக்கி வாங்கினே.

[அவன் தோளில் தட்டி]

புஷ்:-பலே ராஜா!

[அசட்டுச் சிரிப்புடன்]

கோஞ்:-இப்ப நான் அழகா இல்லே?

புஷ்:-ஓ, பிரமாதமா, வெள்ளி மூக்குச் சிங்கமாட்டம் இருக்கிறே.

கோஞ்:-அப்படின்னு?

புஷ்:-அழகா ஆடுதன் ராஜா மாதிரி இருக்கேன்னு அர்த்தம்.

கோஞ்:-அப்ப நீ என்னைக் கட்டிக்கிறியா?

புஷ்:-கட்டிக்கலாம், ஆனா, கை நீளம் பத்தாதேன்னு பார்க்கிறேன்.

நோஞ்:-என்ன புஷ்பா விளையாடுறே?

புஷ்:-உங்கிட்டே விளையாடாமே வேறு யாருகிட்டே விளையாடுறது?

நோஞ்:-சொல்ல மறந்துட்டேனே. மாமா உன்னைத் தேடினாரு, வா போகலாம்.

[இருவரும் செல்கின்றனர்.]

## காட்சி 34

[டவுன் ஹால். தேனீர் விருந்து நடக்கிறது. எல்லோரும் சாப்பிட்டபின், முத்துப் பண்டாரம் எல்லோரையும் ராஜாவிற்கு அறிமுகப்படுத்துகிறார். சேகரைக் காட்டி]

முத்து:-இவர்தான் முனிசிபல் சேர்மன், திருவாளர் சேகர். சிறந்த கொடை வள்ளல்.

[ராஜாவும் சேகரும் கைகுலுக்குகின்றனர்.]

[ச. க.வைக் காட்டி]

முத்து:-இவர் பா. வெ. மா. ச. க. தவணைக் கடைக்காரர். குறைந்த வட்டிக்குப் பணம் கொடுத்து மக்களுக்கு உதவி செய்பவர்.

[ச. க.வும ராஜாவும் கைகுலுக்குகின்றனர்.]

[கமலாவைக் காட்டி]

முத்து:-இவர் சேர்மன சேகர் அவர்களின் பெண். கல்லூரி மாணவி. முற்போக்கு எண்ணம் படைத்த திரு வாட்டி.

[இருவரும் நமஸ்கரித்துக் கொள்கின்றனர்.]

[விநோதனைக் காட்டி]

முத்து -இவரைத்தான் உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்க வேண்டியதில்லையே.

[அடுத்தவரைக் காட்டி]

முத்து:-இவர் நகர ஆணையாளர். அடியேன் பெயர் சுயநலம். ஆனால் பொதுநலவாதி.

ச. க.:-நண்பர்களே! இன்றைய நமது விருந்தினரும், இவ்வூருக்கு சப் இன்ஸ்பெக்டராக வந்திருப்பவருமான திருவாளர் ராஜா அவர்களைப் பாராட்டி, நமது முனிசிபல் சேர்மன் திருவாளர் சேகர் அவர்கள் சில வார்த்தைகள் பேசுவார்கள்.

சேகர்:-சபையோர்களே! இவ்வூருக்குப் புதிதாக உத்தியோகஸ்தர்கள் வந்தாலும், மாற்றலாகிப் போனாலும், அவர்களுக்கு வாழ்த்துரை கூறுவதே என் தொழிலாகி விட்டது. திருவாளர் ராஜா அவர்கள் நல்ல இளைஞர். அவர் நமக்குப் புதியவரென்றாலும், அவரைப் பார்த்த உடனேயே நல்ல சுறுசுறுப்பும், தொழில் சிரத்தை உடையவரென்றும் தெரிகிறது. போலீஸ் உத்தியோகம் பொறுப்புடையது. மிஸ்டர் ராஜா இன்று சப் இன்ஸ்பெக்டராக வந்துள்ளார். நமது டாக்டர் விநோதனின் நெருங்கிய பந்து அவர். டாக்டர் விநோதனைப் போலவே மிஸ்டர்

ராஜாவும், நகர மக்களுக்குப் பணிபுரிவாரென்று நம்புவோமாக. அவர் உத்தியோகத்தில் மேன்மையும் கீர்த்தியுமுடைய, இறைவனைப் பிரார்த்திப்போமாக. வணக்கம்.

ராஜா:-நண்பர்களே! உங்களுக்கு நான் முற்றிலும் புதியவன். என்னை நீங்கள் வரவேற்றுக் கௌரவித்ததற்கு நன்றி செலுத்துகிறேன். விநோதன் என் உறவினர் மட்டுமல்ல, ஒரே குடும்பத்தினருங்கூட. அவர் மூலமாக ஊரின் நிலைமையையும், உங்கள் அனைவரின் அன்பையும் ஓரளவிற்குப் புரிந்துகொண்டிருக்கிறேன். உங்களனைவருக்கும் தொண்டு செய்வதே என் லக்ஷியம், கடமையுங்கூட. வணக்கம்.

[எல்லோரும் கை தட்டுகிறார்கள்.]

## காட்சி 35

[ஊருக்கு வெளிப்புறம். ஒரு நீரோடை. அதன் பக்கத்திலே அமர்ந்து விநோதனும் கமலாவும் ஆனந்தமாகப் பாடிக்கொண்டிருக்கிறார்கள். பாட்டு முடியும் தருணத்தில், ராஜாவும், ஒரு போலீஸ்காரனும், சாராயத் தோண்டியுடன் திருட்டுச்சாராயம் காய்ச்சிய ஒருவனை பிடித்துக்கொண்டு வருகிறார்கள். விநோதன் பாட்டைக் கேட்டு ராஜா திகைத்து நிற்கிறான். பாட்டு முடிவில் ராஜாவைப் பார்த்துவிட்டு]

விநோ:-அடடே ராஜாவா, வாப்பா, ஏன் இப்படி நிற்கிறாய்?

ராஜா:-உன் பாட்டைக் கேட்டு ஆனந்தத்தில் அப்படியே நின்று விட்டேன்.

விநோ:-கால் நடையாக எங்கே போய் வருகிறாய்?

ராஜா:-குற்றவாளிகளைக் கண்டு பிடிக்க!

விநோ:-இவன் யார்?

ராஜா:-குற்றவாளி.

[கமலாவைப் பார்த்து]

விநோ:-இவர்கள் யார் தெரியுமா? இவர்கள் தான்......

ராஜா:-தெரியும். அறிமுகத்திற்கு அவசியமில்லை.

விநோ:-எல்லாவற்றிலும் உனக்கு விளையாட்டுத்தான் ராஜா.

ராஜா:-விளையாடும் உடையிலா நிற்கிறேன். என் தோற்றம் விளையாடக்கூடியவனுகவா படுகிறது?

விநோ:-ஓஹோ, இப்பொழுது நான் வெறும் ராஜா இல்லை, சப் இன்ஸ்பெக்டர் ராஜா என்று சொல்லுகிறாய்? அப்படித்தானே?

ராஜா:-சரியாகவே புரிந்துகொண்டிருக்கிறாய்! [கையிலிருக்கும் பிரம்பை மற்றொரு கையில் தட்டிக் கொண்டே] நன்றி வருகிறேன். [செல்கிறான்.]

விநோ:-ராஜா!

[நடந்துக்கொண்டே]

ராஜா:-மாலையில் சந்திக்கிறேன்.

விநோ:-துடுக்குக்காரன்.

கமலா:-தடுக்கு மட்டுமேல்ல, கர்வமும் சேர்ந்திருக்கிறது.

## காட்சி 36

[தோட்டிக் குடிசை. முருகன் வாசலில் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்துக் கொண்டிருக்கிறான். செல்லம் வெள்ளையுடையணிந்து தலையில் முக்காடிட்டு வருகிறாள். உற்றுக் கவனித்த முருகன், கையெடுத்துக் கும்பிட்டுக்கொண்டே]

முரு:-வாங்கம்மா, கும்புடுறேன்.

[செல்லமும் கைகூப்புகிறாள்.]

முரு:-இப்படிக் கட்டிலில் உக்காருங்கம்மா.

செல்:-பரவாயில்லேயப்பா!

முரு:-சும்மா உட்காருங்க. வள்ளி! ஏ வள்ளி!

[செல்லம் கட்டிலில் உட்காருகிறாள். உள்ளிருந்தபடியே]

வள்ளி:-ஏங் கூப்பிடுறே?

முரு:-இங்கே வந்து பாரு, யாரு வந்திருக்காங்கன்னு.

செல்:-உஸ், மெதுவாகப் பேசு முருகா.

முரு:-பயப்படாதீங்க, இங்கே யாருமில்லே.

செல்:-புஷ்பா எங்கே?

முரு:-இன்னும் ஆஸ்பத்திரியிலேருந்து வர்லே.

[உள்ளிருந்து வந்து]

வள்ளி:-வாங்கம்மா! அடேயப்பா, பாத்து எவ்வளவு நாளாச்சு?

செல்:-நீங்க ரெண்டு பேரும் எனக்குச் செய்த உதவிக்கு என்ன கைம்மாறு செய்கிறதென்றே தோணல்லே!

முரு:-அதெல்லாம் என்னத்துக்கம்மா. நாங்க என்ன பிரமாதமா செஞ்சிட்டோம்? நீங்க பணம் அனுப்பினீங்க. அதெக்கொண்டு புஷ்பாவெ வளத்துப் படிக்க வச்சோம். இன்னிக்கிப் புஷ்பாதான் சம்பாதிச்சு எங்களுக்குச் சோறு போடுது.

[வள்ளி ஒரு பக்கம் போய் தனித்து நின்று]

வள்ளி:-இந்தா இங்கே வந்துட்டுப் போ.

[முருகன், வள்ளியிடம் போகிறான். தாழ்ந்த குரலில்]

வள்ளி:-இப்பத்தான் குட்டி நாலு பணம் சம்பாதிக்க ஆரம்பிச்சிருக்கா. அம்மா பேசுறதெப் பாத்தா, அதெழச் சுக்கிட்டுப் போயிடுவாங்க போலிருக்கே.

முரு:-அட, புத்திசாலிக் கொக்கே. வாயை மூடிக்கிட்டுப் பேசாமெ போடி உள்ளே. இவவேறே எனக்கு மந்திரியாகப் பாக்கிறா.

[வள்ளி முணங்கிக்கொண்டே உள்ளே செல்கிறாள்.]

செல்:-என்ன முருகா, வள்ளி என்ன சொல்கிறாள்

முரு:-இது எங்க சொந்த விஷயம்மா.

செல்:-விநோதனும் புஷ்பாவும், ஓரேயிடத்தில் வேலை பார்ப்பதால், நெருங்கிப் பழகுவார்கள் இல்லையா?

முரு:-ஆமாம்மா, நான்தான் அதெல்லாம் அப்பப்போ கடுதாசியிலே எழுதியிருந்தேனே.

செல்:-விநோதனுக்கோ புஷ்பாவுக்கோ தங்களுக்குள்ள உறவு இன்னதெனத் தெரியாதே?

முரு:-துளிகூடத் தெரியாது. வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வந்திருக்கிறேன்.

செல்:-மேற்கொண்டு விவகாரத்தை எப்படி முடிப்பது? அவர்களிருவருக்கும் திருமணம் நடத்த வேண்டுமே! ஊர் ஒப்புக்கொள்ளுமா?

முரு:-ஊரு முன்னெப்போலே இல்லேம்மா, வெகு தூரம் முன்னேறி இருக்குது. ஜாதி வெறி முன்னே இருந்ததுபோல இப்போ இல்லே. டாக்டரும் புஷ்பாவும் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிறதெ யாரும் தடுக்கமுடியாது.

செல்:-......

முரு:-கல்யாண விஷயத்திலே, பிள்ளைங்க இஷ்டத்துக்கு விட்றதுதா இந்தக் காலத்துக்கு நல்லது. அவனைக் கட்டிக்கோ, இவனைக் கட்டிக்கோன்னு பெத்தவுங்க பலவந்தப்படுத்தக்கூடாது. புஷ்பா ஒண்ணும் சின்னப் புள்ளெயில்லே. அவுங்களுக்குள்ளே, மனசு ஒண்ணுபட்டு சம்மதிக்கிட்டே ஒண்ணைக்கித் தெரியப்படுத்துறாங்களோ அண்ணைக்கே நாம ஏற்பாடு செஞ்சுடுவோம். அதுவரை பொறுத்திருங்க.

செல்:-புஷ்பாவை என் மகளென்ற உரிமையோடு கட்டித் தழுவ என் உள்ளம் துடியாய் துடிக்கிது முருகா.

முரு:-இது மிகவும் ஆபத்தான எண்ணம்மா. ஊரைப் பத்திக் கவலையில்லே. உங்க குழந்தைங்க மனசை நீங்க தெரிஞ்சு கொள்ளணும். அவசரப்பட்டு உங்க ஆவலே வெளிப்படுத்திட்டா, மீண்டும் நீங்க சிதையைப்போலே வனவாசஞ் செய்யணும். அதுமட்டுமல்ல, நாலு பேருக்கு மத்தியிலே கண்ணியமா வாழுற ராஜா, விநோதன் இருவருக்குமே அது அவமானமாகவும் படலாம். நல்லா யோசித்து இந்த எண்ணத்தெ வெளியிடுங்க.

செல்:-சரி நான் வருகிறேன்.

முரு:-போய் வாங்கம்மா. ராஜா ஒங்க வளப்புப் புள்ளையாகவே இல்லே, சொந்த மகனைப் போலவே இருக்காரு. அவுங்க குடும்பம் இல்லேன்னு, நீங்க இந்த அளவுக்குச் சுகமாக இருந்திருக்க முடியுங்களா?

செல்:-ஆம் முருகா, ராஜாவிற்கு தெரியக்கூடாதென்றே என் இதயக் குமுறலே அடக்கிக்கொண்டு வருகிறேன். அது என்னையும் மீறி என்று வெளிப்படப் போகிறதோ தெரியவில்லை.

முரு:-பதட்டப்படாதிங்க அம்மா. போய் வாங்க [கோஞ்சான் ஒரு கோடியில் வந்து நின்று]

கோஞ்:-மாமா, புஷ்பா எங்கே?

[கோஞ்சானின் குரல்கேட்டதும் செல்லம் வேகமாகச் சென்று மறைகிறாள்.]

முரு:-இன்னும் வரல்லேப்பா, வாற கோந்தான்.

கோஞ்:-யார் மாமா போறது?

முரு:-யாராயிருந்தா உனக்கென்ன? ஓம் வேலையைப் போய்ப் பாரு.

## காட்சி 37

[வினோதன் அறை. வினோதன் சேரில் அமர்ந்து ஏதோ ஆராய்ச்சி செய்துக் கொண்டிருக்கிருன். புஷ்பா அவன் பக்கத்தில் நின்று, ஆரஞ்சுப் பழத்தை உறித்துக் கொண்டிருக்கிருள்.]

புஷ்:-அம்மா வந்ததும் திருமண ஏற்பாடு என்று சொன்னீர்களே? அவர்கள் வந்து எத்தனையோ நாட்களாகி விட்டதே! கேட்டீர்களா? என்ன சொன்ஞர்கள்?

வினோ:-அவசரப்படாதே. சந்தர்ப்பம் வாய்க்க வேண்டாமா? மேலும், என் கல்யாணத்தைப்பற்றி நானே கேட்பதென்ருல், வெட்கமாகவும் இருக்கிறது.

[இந்தக் காட்சியையும் பேச்சையும் கவனித்துக்கொண்டே உள்ளே நுழைகிருன் ராஜா. ராஜாவைப் பார்த்ததும் ஒதுங்கி நிற்கிருள் புஷ்பா. வினோதன் சமாளித்துக் கொண்டு]

வினோ:-வா ராஜா, இப்படி உக்கார்.

ராஜா:-முன்னறிவிப்பின்றி அசந்தர்ப்பமாக உள்ளே நுழைந்ததற்கு மன்னிக்கவும்.

வினோ:-பரவாயில்லே ராஜா உக்கார்.

ராஜா:-உன்னுடன் நான் தனித்துப் பேச வேண்டும்.

[புஷ்பாவை விநோதன் பார்க்கிறான், அவள் வெளியேறிச் செல்கிறாள்.]

ராஜா:-விநோதன், காதலென்பதற்கு நீ செய்துக் கொண்டிருக்கும் அர்த்தமென்ன?

விநோ:-காதலென்றால் கலந்து அனுபவிப்பதென்று பொருள்.

ராஜா:-ஒருவருடனா? பலருடனா?

விநோ:-அது சந்தர்ப்பத்தைப் பொருத்தது!

[ராஜா எழுந்து நின்று, கைப்பிரம்பை மேஜையில் தட்டியவாறு]

ராஜா:-உறவினன் என்ற முறையில் உன்னுடன் நான் பேசவில்லை. ஒரு சப் இன்ஸ்பெக்டர் என்ற முறையில் சொல்கிறேன். நீ கன்னிப் பெண்களுடன் நடத்தும் களியாட்டங்கள் மிக மிகத் தப்பானது. உன் நடத்தை ஒழுங்குபட வேண்டும்.

விநோ:-......

ராஜா:-உன்போன்ற அயோக்கியர்களால், இந்த நாட்டில் அழுதழுது உயிர் துறந்த பெண்மணிகள் அநேகங் கோடி. என்போன்ற இளைஞர்களால் இனி இதை ஒருக் காலும் சகித்துக் கொண்டிருக்க முடியாது. என்ன சொல்லுகிறாய் விநோதன்? என்னப்பா சொல்லுகிறாய்?

[சட்டையைப் பிடித்துக் குலுக்கிக் கேட்கிறான்.]

[கலங்கியபடி]

விநோ:-ராஜா! என் செய்கை தவறானதென்பதை நான் உணர்கிறேன். ஆனால், அதிலிருந்து என்னால் மீள முடியவில்லை. உண்மையாகச் சொல்கிறேன் ராஜா. கமலா, புஷ்பா என்ற இந்த இரு பெண்களைத் தவிர, வேறு பெண்களுடன் நான் பேசியதுகூடக் கிடையாது. இருவரும் என்னை நேசிக்கிறார்கள். இதில் யாரை ஏற்பது, யாரை மறுப்பது என்று என்றால் நிர்ணயிக்கவே முடியவில்லை.

[அவன் பிடியைவிட்டு]

ராஜா:-நீ ஒரு கோழை! உன்னையும் இரு பெண்கள் காதலிக்கிறார்களே!

விநோ:-......

ராஜா:-உனக்கு வேண்டியது எது என நிர்ணயிக்கும் சக்தி உனக்கில்லை என்கிறாய், ஒப்புக் கொள்ளுகிறேன். உன் விவகாரத்தில் நான் தலையிடுகிறேன் என்று நீ தவறாக நினைக்கவில்லை என்றால், இந்த இரு பெண்களில் நீ யாரை மணக்க வேண்டும் என்பதைப்பற்றி நான் முடிவு செய்கிறேன். உனக்கு இது சம்மதந்தானே?

விநோ:-பூரணச் சம்மதம். ஆனால்?

ராஜா:-ஆனால் என்னப்பா ஆனால்?

விநோ:-ஒருத்தியை மணந்துக் கொண்டால் இன்னொருத்தி சும்மா விடுவாளா? இருவரும் படித்த பெண்கள்!

ராஜா:-அந்தக் கவலையெல்லாம் உனக்கு எதற்கு? நான் எப்படியோ சமாளிக்கிறேன். என் முடிவுப்படி நடப்பதற்கு நீ தயார்தானே?

விநோ:-தயாராக இருக்கிறேன்.

ராஜா:-மறுத்தால்?

வினோ:-இருக்கவே இருக்கிறது உன் உத்தியோக மிரட்டல்.

ராஜா:-மிரட்டலில்லை தம்பி, பாக்ட்! மனிதன் நேர்மையுடன் நடக்க வேண்டும். அதிலிருந்து தவறுபவர்களுக்கு தண்டனை வாங்கிக் கொடுக்க ஒருபோதும் தயங்க மாட்டேன். வருகிறேன்.

[செல்கிறான்.]

வினோ:-எங்கேயோ இருந்து பூஜை வேளையில் கரடி புகுந்தாற்போல் வந்து புகுந்தான் இந்தச் சண்டாளன். புஷ்பா! புஷ்பா!!

[பதிலில்லை]

வினோ:-நானே இந்த பயம் பயப்படும்பொழுது, அவள் எங்கே இருக்கப் போகிறாள்? போயே விட்டாள் போலிருக்கிறது.

## காட்சி 38

[சேகர் வீடு. கமலாவும் ராஜாவும் காபி சாப்பிடுகின்றனர். ராஜா டம்ளரைக் கீழே வைத்துவிட்டு]

ராஜா:-அப்படியானால், உங்களுக்கு வினோதனைத் திருமணம் செய்துக் கொள்வதில் எவ்வித ஆக்ஷேபனையும் இருக்க முடியாது, இல்லையா?

கமலா:-ஆக்ஷேபனையா, திருமணம் செய்துகொள்ளும்படி ஆயிரம்முறை கேட்டு விட்டேன். இன்று நாளை என்று அவர் காலத்தைக் கடத்திக்கொண்டே வருகிறார். வெளியில் சொன்னால்கூட வெட்கம். நான் கர்ப்பவதி!

[ஆச்சரியத்துடன்]

ராஜா:-நல்ல துணிச்சல்காரப் பெண்ணம்மா நீ. இத்தனை நடந்ததற்குப் பிறகும், இதை யாரிடமும் சொல்லாதிருந்திருக்கிறாயே?

கமலா:-சொன்னால் எனக்குத்தானே அவமானம்.

ராஜா:-சொல்லாதிருந்தால் அந்த அவமானத்திலிருந்து தப்பித்துக்கொள்வாயா? பைத்தியக்காரப்பெண்ணே.

கமலா:-......

ராஜா:-உங்கள் திருமணத்தைப்பற்றி உன் அப்பா என்ன சொல்கிறார்?

கமலா:-அப்பா சம்மதிக்கிறார், அண்டை அயலார் சம்மதிக்கிறார்கள், இந்த ஊரே சம்மதிக்கிறது. ஆனால், உங்கள் விநோதன்தான் சம்மதிக்கவில்லை.

ராஜா:-அவனைச் சம்மதிக்கச் செய்ய வேண்டியது என் பொறுப்பு. நாளைக்கே இந்தத் திருமணத்தை நடத்தியாக வேண்டும். இனி காலம் கடத்த முடியாது.

கமலா:-என் விஷயத்தில் தாங்கள் இவ்வளவு சிரத்தை காட்டுவதற்கு மிகவும் நன்றி செலுத்துகிறேன். நீங்கள் நீடூழி வாழ வேண்டும்.

[நின்று கொண்டிருக்கும் அவன் கால்களில் விழுந்து நமஸ்கரிக்கப் போகிறாள். விலகிக் கொண்டு]

ராஜா:-விநோதன் என் குடும்பத்திலொருவன். அவன் சுகத்திலும் துக்கத்திலும் எனக்கு பங்கு இருக்கிறது. இதிலே நீ எனக்கு ஏன் நன்றி செலுத்த வேண்டும். உன் அப்பா எங்கே? அவருடன் கலந்து மேலே ஆக வேண்டியதற்கு ஏற்பாடு செய்யலாம்.

கமலா:-கீழே இருக்கிறார். வாருங்கள் நானும் வருகிறேன் போய் கேட்போம்.

## திருப்புக் காட்சி

குமரன் அச்சகத்திலிருந்து ஒரு கட்டுப் பேப்பருடன் சேகரும், ராஜாவும் வருகிறார்கள்.

## திருப்புக் காட்சி

புஷ்பக் கடையிலிருந்து ராஜாவும், சேகரும் வருகிறார்கள். பின்னால் ஒரு கூடையுடன் ஒரு பையனும் வருகிறான்.

## திருப்புக் காட்சி

ஜவுளிக் கடையிலிருந்து தூக்க முடியாத ஜவுளி மூட்டைகளுடன், ராஜாவும் சேகரும் வெளியே வருகின்றனர்.

## திருப்புக் காட்சி

ஜுவல்லரி மார்ட்டிலிருந்து ராஜாவும் சேகரும், கையில் நகைப் பெட்டியுடன் வெளியே வருகிறார்கள்.

## காட்சி 39

[போலீஸ் ஸ்டேஷன். ராஜா மேஜையின்முன் இருந்து எழுதிக் கொண்டிருக்கிறான். இரு

போலீஸ் ஜவான்கள் நின்றுகொண்டிருக்கின்றனர். புஷ்பா வருகிருள்.]

ராஜா:-எங்கே வந்தாய்?

புஷ்:-டாக்டருக்கும் கமலாவிற்கும் கல்யாணமென்று கேள்விப்பட்டேன்!......

ராஜா:-ஆமா, அதற்கென்ன? நீ வாழ்த்துப் பத்திரம் படித்துக் கொடுக்கப் போகிருயா?

புஷ்:-இல்லை. அவர் எனக்குரியவர். என்னைக் கல்யாணம் செய்துக் கொள்வதாகக் கூறி ஏமாற்றி இருக்கிருர். எழுத்து மூலமாகக்கூட இதற்கு ஆதாரமிருக்கிறது. டாக்டரைப்பற்றி—அவர் செய்த நம்பிக்கை மோசம்பற்றி—உங்களிடம் ரிப்போர்ட் செய்ய வந்திருக்கிறேன்.

ராஜா:-உன் தைரியத்திற்கு மெச்சுகிறேன். இப்படி உக்கார்.

[புஷ்பா உக்காருகிருள்.]

ராஜா:-நீ நர்ஸ் தானே?

புஷ்:-ஆம்;

ராஜா:-உன்னைக் காதலித்தவர்?

புஷ்:-டாக்டர்.

ராஜா:-இருவரும் ஒரே இடத்தில்தானே வேலை பார்க்கிறீர்கள்?

புஷ்:-ஆமாம்.

ராஜா:-உங்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் தொழில் செய்வதற்கா, அல்லது ஆஸ்பத்திரியைக் காதல் மண்டபமாக்குவதற்கா?

புஷ்:-இது எங்களுக்குச் சம்பளம் கொடுப்பவர்கள் கேட்க வேண்டிய கேள்வி.

ராஜா:-உங்களுக்குச் சம்பளம் கொடுப்பவர்கள்தான், சம்பளம் பெறுபவர்கள் செய்யும் அக்ரமங்களைக் கண்டு பிடிக்க என்போன்றவர்களை நியமித்திருக்கிறார்கள்.

புஷ்:-உங்கள் கருத்துப்படி, குற்றவாளி நான் மட்டு மில்லை. டாக்டர் வினோதனும் என்போன்ற குற்றவாளி தான்.

ராஜா:-ரிப்போர்ட் செய்ய வந்தது நீ. உன்னிடம் வாக்குமூலம் கேட்கிறேன். வக்கீல் வாதத்தையல்ல.

புஷ்:-......

ராஜா:-ஏமாந்த பெண்ணே, நீ என்ன ஜாதி?

புஷ்:-தோட்டிப் பெண்.

ராஜா:-வினோதன்?

புஷ்:-தெரியாது.

ராஜா:-உன்னைவிட உயர்ந்த ஜாதிக்காரன். நீ இதை ஒப்புக்கொள்கிறாயா?

புஷ்:-......

ராஜா:-காதலிக்கும்போதே கருத்துடன் சிந்திக்க வேண்டாம்? அவன் அந்தஸ்து என்ன, நம்முடைய அந்தஸ்து என்ன என்பதையெல்லாம் சீர்தூக்கிப் பார்க்காமல் செய்வதற்கும் பெயர் காதலல்ல, காமம். வினோதனின் சொந்தக்காரன் என்ற முறையில் சொல்லு கிறேன். அவனுக்கேற்றவள் நீயல்ல. உன் திருமணத்தை ஒப்ப முடியாது. சேர்மன் மகள் கமலாதான் அவனைக்

கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். அவர்கள் இரு வருக்கும் திருமணம் நடப்பது உறுதி, நிச்சயம். இதை உன்போன்ற ஆயிரம் பெண்கள் தடுத்தாலும் நிறுத்த முடியாது. [பாக்கெட்டிலிருந்து ஒரு நோட்டுக் கட்டை எடுத்து அவளிடம் நீட்டியவாறு] இந்தா, இதைப் பெற்றுக் கொள். சேரிக்குச் சென்று உன் ஜாதிக்காரர் களிலே ஒரு நல்ல இளைஞனைப் பார்த்துத் திரு மணம் செய்துகொண்டு, சுகமாக வாழ்க்கை நடத்து. போ! போ விரைவாக இவ்விடத்தைவிட்டு.

[அவன் கையிலிருந்த நோட்டுக் கட்டைத் தட்டிவிட்டபடி]

புஷ்:-சண்டாளர்களே, நாசக்காரர்களே! நீங்களும் உங்க ஜாதித் திமிரும் குட்டிச்சுவராய்ப் போக!

[பெல்லைத் தட்டி]

ராஜா:-த்திரி செவண்டி ஒன்!

போலீஸ்:-சார்!

ராஜா:-இந்தக் கழுதையை வெளியேற்று.

[போலீஸ் நெருங்க, புஷ்பா வெளியேறிச் செல்கிறாள்.]

## காட்சி 40

[புஷ்பா சென்றுக்கொண்டிருக்கிறாள்: கோஞ் சான்•வந்து]

கோஞ்:-புஷ்பா.

புஷ்:-......

[விட்ட நெருங்கி]

நோஞ்:-அழுதியா புஷ்பா? உன்னை யார் என்ன சொன்னாங்க?

புஷ்:-......

நோஞ்:-சொல்லு புஷ்பா, உன்னைத் திட்டியது எவனாயிருந்தாலும் சரி, உசிரெ வாங்கிட்டு மறுகாரியம் பாக்கிறேன். எம்பேரு நோஞ்சான்னு பாக்கிறியா? என் கை குத்தெத் தாங்கக்கூடிய எலும்புப் படைச்ச ஆளு, ஒருத்தெங்கூட இந்த ஊரிலெ இல்லே புஷ்பா.

புஷ்:-அதுமட்டுமல்ல, உன்னைப்போல அன்புள்ளம் படைத்தோர், ஆயிரத்திலே ஒருத்தர்கூடக் கிடையாது. வா போகலாம்.

## காட்சி 41

[ராஜா கூடத்தில் உட்கார்ந்திருக்கிறான். செல்லம் ஒரு பாத்திரத்தில் மோர் எடுத்து வந்து கிளாஸிலே ஊற்றிக் கொடுக்கிறாள். ராஜா அதை வாங்கிக்கொண்டு]

ராஜா:-வினோதனுக்குத் திருமண ஏற்பாடு செய்துவிட்டேனம்மா. அவசர ஏற்பாடானதினாலே உங்களைக் கலந்தாலோசிக்கிறதுக்குக்கூட முடியவில்லே.

செல்:-அதனால் என்னப்பா. என்றைக்குக் கல்யாணம்?

ராஜா:-இன்னும் இரண்டு நாள் இருக்கிறதம்மா.

செல்:- இவ்வளவு குறுகிய காலத்திலா, அப்படி என்ன அவசரம்?

ராஜா:- விநோதன் ரொம்ப அயோக்யனாய்ப் போய் விட்டானம்மா. இப்படியே விட்டுக்கொண்டு போனால், ரொம்பவும் கெட்டுவிடுவான் போலிருக்கிறது. அதனால்தான் அவசர அவசரமாக ஏற்பாடு செய்தேன்.

செல்:- பெண் புஷ்பாதானே?

ராஜா:- இல்லை, கமலா.

[ஆச்சரியத்துடன்]

செல்:- கமலாவா?

ராஜா:- ஆம்; சேர்மன் மகள் கமலாதான்.

[ஆ என்று அலறியபடிக் கீழே விழுந்து விடுகிறாள். ராஜா தண்ணீர் தெளித்து, விசிறி, மூர்ச்சை தெளிவித்து எழுப்பி உட்கார வைக்கிறாள்.]

ராஜா:- அம்மா, ஏன் இப்படி திடீரென மயங்கி விழுந்தீர்கள்? இப்பொழுது எப்படியம்மா இருக்கிறது?

[மெதுவாக]

செல்:- ராஜா.

[திடீரென்று பரபரப்படைந்தவளாக, பலமாக]

செல்:- ராஜா.

ராஜா:- என்னம்மா, என்ன வேண்டும்?

செல்:-நீ ஏற்பாடு செய்திருக்கும் திருமணம் நடக்கக் கூடாது. மீறி நடத்துவதாயிருந்தால், என்னைக் கொன்று புதைத்துவிட்டு அந்தக் கல்யாணத்தை நடத்து.

ராஜா:-ஏன் இப்படிச் சொல்லுகிறீர்கள்?

செல்:-உன்னிடத்தில் ஆரம்பத்திலேயே எல்லாவற்றையும் சொல்லாது போனேன். என்னுடைய சொந்த ஊர் இது தான். நான் விதவையான பிறகு, சேகர் என்னைக் காதலித்தார். நான் கர்ப்பவதியானேன். என் அண்ணன்—விநோதனின் தந்தை—இந்த அவமானம் தாங்காது, தூக்கு மாட்டிக் கொண்டு இறந்தார். சேகருக்கு வாங்கித் தந்த கடன் பணத்திற்காக, எங்கள் வீடு ஏலம் போயிற்று. நானும் விநோதனும் அனாதையானோம். தற்கொலைசெய்துகொள்ளப் போன என்னை முருகன் காப்பாற்றினான். அதன் பிறகு பிறந்த என் குழந்தை புஷ்பாவை, முருகனிடமே கொடுத்து விட்டு உங்கள் வீடு வந்து சேர்ந்தேன். நான் இந்த வரலாற்றை உனக்குச் சொல்லாமல் வெட்கத்தால் மறைத்து வைத்தேன். எல்லாம் வீணாயிற்று. அந்தச் சண்டாளனின் மகளை விநோதன் மணம் செய்து கொள்ளக்கூடாது. புஷ்பாவைத்தான் மணந்துக் கொள்ள வேண்டும்.

ராஜா:-அறியாத்தனத்தால் பெரிய தவறு செய்து விட்டேனம்மா. புஷ்பாவை வாயில் வந்தபடியெல்லாம் திட்டினேன்.

செல்:-ராஜா, அனாதையான என்னையும் விநோதனையும் உன் பாட்டனார் ஆதரித்தார். உங்கள் உப்பைத் தின்று இந்த உடலை இதுவரை காப்பாற்றி வந்தேன். எல்லாம் என் மகளுக்காகத்தான். அவள் வாழ்வு அழிந்தபின் நான் வாழ்ந்து பிரயோஜனம் என்ன?

ராஜா:-எல்லாவற்றையும் ஒரே நொடியில் மாற்றி, உங்கள் விருப்பம்போல், நம் புஷ்பாவிற்கும் விநோதனுக்கும் திருமணம் செய்து வைக்கிறேன்.

[ஓடுகிறான்.]

## காட்சி 42

[ராஜா நின்றுக் கொண்டிருக்கிறான். நாற்காலியில் உக்கார்ந்திருந்த விநோதன் எழுந்து]

விநோ:-என்னை ஸ்டெடி மைண்ட் இல்லாதவனென்றாய். என் வாழ்க்கையை ஒழுங்குபடுத்தப் போவதாகக் கூறினாய். இருதலைக் கொள்ளியான என் காதலை செம்மைபடுத்துவதாகச் சொல்லி என் சொந்த வாழ்க்கையிலே குறுக்கிட்டாய். இப்பொழுது நான் கமலாவை மணக்கக்கூடாதென்கிறாய். உனக்குப் பயித்தியம் பிடித்துவிட்டதென்று நினைக்கிறேன். உன் மூளையைப் பரிசோதிக்க வேண்டும்.

ராஜா:-உன் ஆராய்ச்சியை பிறகு வைத்துக் கொள்ளலாம். அம்மா உனக்காகக் காத்திருக்கிறார்கள் போ. அவர்கள் உனக்கு விபரம் கூறுவார்கள்.

விநோ:-நீ பிரமாதமாகக் கூறிவிட்டாய். இனி அவர்கள் கூறப் போகிறார்கள்.

ராஜா:-ஆத்திரப்படாதே தம்பி, சொல்வதைச் செய். முதலிலே வீட்டுக்குப் போ. நான் ஸ்டேஷனுக்குப் போய் விட்டு வருகிறேன். பிறகு நீ என் பயித்தியத்திற்கு மருந்து தயாரிக்கலாம்.

விநோ:-மனிதனிடத்தில் மனிதன் அகப்பட்டால், குரங்காக ஆட்டி வைக்கப்படுவான் என்று கேள்விப்பட்டி

ருக்கிறேன். நீ என்னை அதிலும் கீழாக ஆட்டிவைக்கிறாய். வீட்டுக்குப் போகிறேன், விரைவில் வந்து சேர்.

## காட்சி 43

*[செல்லம் வீடு. சேகர் வீட்டின் முன்புறத்தில் சேரில் அமர்ந்திருக்கிறார். விநோதன் வருகிறான்.]*

சேகர்:-வா விநோதன், உனக்காகத்தான் வெகுநேரமாகக் காத்திருக்கிறேன். ராஜா எங்கே?

விநோ:-இதோ வருகிறான்.

*[ராஜா வந்து சேகரைப் பார்த்துவிட்டு ஆத்திரமாக]*

ராஜா:-உங்களுக்கு இங்கே என்ன வேலை?

சேகர்:-கோபப்படாதே ராஜா. குலைநடுக்கம் ஏற்பட்டிருக்கும் நிலை. எண்ணிப் பார். கல்யாணத்திற்கு எல்லா ஏற்பாடும் செய்து விட்டேன். இந்த ஏற்பாட்டிற்கு முந்தியே கமலாவும் விநோதனும் காதலர்களென்பது என் நண்பர்களனைவருக்கும் தெரியும். கல்யாணம் நடப்பது நிச்சயம் என்ற நம்பிக்கையில், பல மாதங்களுக்கு முன்பே தன்னை விநோதனுக்கு ஒப்படைத்து விட்டாள் கமலா. இன்று அவள் கர்ப்பவதி. இந்த நிலையில், கல்யாணம் தடைபட்டால், கமலாவின் நிலை—என் மானம்—என்ன ஆவது என்பதை நீதான் சொல்ல வேண்டும். விநோதன் படித்தவன். பழிச் செயலுக்கு இடந் தரமாட்டான் என்று எண்ணினேன். நாசமடைந்து விட்டது. இந்தத்

திருமணம் நடக்கவில்லையென்றால், நான் தற்கொலை செய்து கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை.

[ உள்ளிருந்து வந்து ]

செல்:-தாராளமாகச் செய்துக்கொள். அது தான் நீ செய்திருக்கும் பாபங்களுக்குப் பிராயச்சித்தம்.

சேகர்:-செல்லம் !

செல்:-செல்லந்தான். செத்துவிட்டாள் என்று எண்ணிக் கொண்டிருந்தாயே, அந்தச் செல்லந்தான். கற்பழித்துக் கர்ப்பவதியாக்கி, கண்ணீர் மல்கத் தெருவில் ஒட்டி விட்டாயே, அந்தச் செல்லந்தான். உன் அடாத செய்கையினால், மானத்துக்கஞ்சி தூக்குப் போட்டுக்கொண்டு இறந்தாரே புரபஸர் ரெகுநாத், அவருடைய தங்கை செல்லந்தான். எண்ணிப்பார், இன்று உன் மகள் கமலா என்ன நிலையிலிருக்கிறாளோ, அதே நிலையில்தானே அன்று நானிருந்தேன்? இன்று நீ எப்படி விநோதனைக் கெஞ்சுகிறாயோ, இதினும் பரிதாபமாகத்தானே என் தமையன் உன்னைக் கெஞ்சினார்? உன் மனம் அப்போது கல்லாக இருந்தது, இன்று கண்ணீர் சிந்துகிறாய்! பட்டினி இருந்தவர்களால்தான் பசியின் தன்மையை உணர முடியும். உன் பரிதாபகரமான நிலையை நான் உணர்கிறேன். ஆனால், உன் நிலை கண்டு என் மனம் துளிகூட இரங்கவில்லை, இரங்கப் போவதுமில்லை! நான் கர்ப்பமுற்றிருந்தபோது, என்னைக் கண்டு எந்த பொது மக்கள் சிரித்தார்களோ, அந்த மக்கள் உன் மகளைப் பார்த்துச் சிரிக்க வேண்டும். எந்த அவமானத்துக் கஞ்சி என் தமையன் தூக்கு மாட்டிக் கொண்டாரோ, அதே அவமானத்திற்காக, நீ அவரைப்போல் மரக் கிளையில்

முரு:-இதெல்லாம் பெரிய ஜாதிக்காரங்களுக்குள்ளே பேச வேண்டிய விசயஞ் சாமி. நீங்க சாப்பிட்டுப் போடுற எச்சிலைத் தின்னு வாழ்றவுங்க நாங்க. இந்த விதிமுறை யெல்லாம் பாத்தா முடியுங்களா?

[ஆத்திரமாக]

ராஜா:-கதை அளக்காதே! புஷ்பாவை எங்களுடன் அனுப்பமுடியுமா, முடியாதா?

முரு:-புஷ்பா உங்க வீட்டுப் பொண்ணு. தாராளமா அழைச்சுகிட்டுப் போங்க. அது விரும்பினா, டாக்டருக்கோ வேறு யாருக்கோ மறுமணங்கூட செய்து கொடுங்க.

ராஜா:-புஷ்பா, புறப்படு நேரமாகிறது!

புஷ்:-நான் வரமுடியாது!

[ஆத்திரத்துடன்]

ராஜா:-ஏன்?

புஷ்:-நீங்களெல்லாம் இன்று முளைத்தவர்கள். புது ஆசை காட்டுவதைக் கண்டு மயங்கிவிட மாட்டேன். நான் பிறந்து வளர்ந்த சேரியிலேதான் இருப்பேன்!

நோஞ்:-அப்படிச் சொல்லு!

ராஜா:-சும்மா இருடா இடியட்!

[முறைத்துக்கொண்டே நோஞ்சான் போகிறான்.]

புஷ்:-இன்ஸ்பெக்டர் சார், கொஞ்சும் மரியாதையாகப் பேசுங்கள். அவர் இடியட்டாக இருக்கலாம். ஆனால், உங்களைப்போல் இரக்கமற்றவரல்ல. அவர் முட்டாளாக இருக்

கலாம். ஆனால், உங்களைப்போல மோசம் செய்யும் கூட்டத்தினரல்ல. அவர் கல்வியில்லாதவராகயிருக்கலாம். ஆனால், [விநோதனைக் காட்டி] இதோ இந்தக் கண்யவானைப் போன்று, காதல்செய்து கைவிடும் கயமைப் புத்தி படைத்தவரல்ல. மொத்தமாகச் சொன்னால், அவர் தாழ்ந்த ஜாதி. உயர்ந்த ஜாதியினருக்குள்ள உலுத்த குணம் ஒன்றையும் அறியாதவர். என் காதலுக்காகப் பல ஆண்டுகள் ஏங்கிய உள்ளத்துடன் என்னைச் சுற்றிக்கொண்டிருந்தவர். என்னைத் தவிர, இந்த ஜன்மத்தில் வேறு எந்தப் பெண்ணையும் ஏறெடுத்துப் பார்க்கமாட்டார்! உங்கள் டாக்டர், என்னை நேசிக்கும்போதே, என்னைவிட்டுக் கமலாவுடன் கூடிக்குலாவியவர். மனிதப் பண்பற்றவர். அவருடன் வாழ்வதைவிட, இந்தத் தொழிலாளியுடன் வாழ்வதையே மேலெனக் கருதுகிறேன், நீங்கள் போய் வரலாம்.

[விம்மியபடி]

செல்:-என் எண்ணத்தில் மண்ணையள்ளிப் போட்டுவிட்டாயே அம்மா!

புஷ்.-உங்க எண்ணம் என்ன என்பதே எனக்குத் தெரியாதேயம்மா.

முரு:-புஷ்பா, அவுங்க உன்னெப் பெத்த தாய். அப்படியெல்லாம் பேசக்கூடாது.

புஷ்:-தாய்ப் பாசம் அற்றுச் சந்தியிலே விட்டுப்போன ஒரு தாயை, திடீரென நான் எப்படியப்பா நேசிக்க முடியும்? சமூகத்தின்மீது அவர்கள் ஆயிரம் குற்றத்தைச் சொல்லலாம். தன்னலமிருந்தாலொழிய, எந்தத் தாயும் தன் குழந்தையை அந்நியரிடம் கொடுத்துவிட்டுப் போகமாட்டாள்.

செல்:-தவறுதான் புஷ்பா, நான் செய்தது தவறுதான்.

ராஜா:-நடந்ததைப்பற்றி வருந்துவதில் பிரயோஜனம் இல்லை புஷ்பா, நான் சொல்வதைக் கேள். நீ மணந்துக் கொண்டிருக்கும் புருஷனோடேயே வாழ்க்கை நடத்து நான் தடுக்கவில்லை. ஆனால், இன்றுமுதல் எங்கள் குடும்பத்திலேதான் நீ இருக்க வேண்டும்.

புஷ்:-என் கணவர்?

ராஜா:-உன் கணவர் மட்டுமல்ல, உன்னை வளர்த்த இந்த உத்தமர்களும் இனி நம்முடன் வாழலாம்.

முரு:-புஷ்பாவுடைய நலத்தைக் கருதி எங்களையும் அழைக்கிறீங்க! நல்லதுன்னு நாங்களும் வந்துடுறோமின்னு வச்சுக்கங்க. இந்தச் சேரியிலெ வசிக்கிறெ மத்தவுங்க கதி என்ன ஆவுறது? சொல்லுங்க சாமி!

ராஜா:-வாழ்க்கை வசதி படைத்த மேல் ஜாதியினர், வீட்டுக்கு ஒருவராக இவர்களை அழைத்துச் சென்றுவிட்டால், சேரி என்ற சொல்லே நம் தேசத்தில் இல்லாது போய்விடும்.

முரு:-அந்த நாள் வரும்வரையிலும் நாங்கள் இங்கேயே இருக்கோம், நீங்க போங்க சாமி!

ராஜா:-இல்லை, நீங்கள் என்னுடன் வருவதுதான் அந்தப் புதுயுகத்தின் துவக்க விழா. இனி இந்தக் கைங்கர்யத்தை என்போன்ற இளைஞர்கள் துணிந்து, தொடர்ந்து நடத்துவார்கள். அதற்கான ஆக்க வேலைகளை, இன்றையிலிருந்து நான் செய்யப் போகிறேன் இது நிச்சயம்.

முரு:-வள்ளி, நமக்கு நல்ல காலம் வந்திடுச்சு வா போவலாம்.

வள்ளி:-அடி ஆத்தாடி, உசந்த ஜாதிக்காரங்களோடு சேந்து வாழுவா? சாமி கண்ணெ அவிச்சுடும்.

முரு:-போடீ, பைத்தியம்! சாமிக்கே இண்ணெக்கித் தான் கண்ணு தெறந்திருக்கு, அது நம்ம கண்ணெ அவிக்குதாம்! வா போகலாம்.

[எல்லோரும் செல்கிறார்கள். அப்பொழுது கமலா, கையில் ஒரு கடிதத்துடன் ஓடிவந்து செல்லத்தின் காலில் விழுகிறாள். ராஜா கடிதத்தை எடுத்து, செல்லத்திடம் கொடுக்கிறான். செல்லம் அதைப் பிரித்துப் பார்க்கிறாள். அந்தக் கடிதத்திலுள்ள வாக்கியம் சேகர் குரலில் ஒலிக்கின்றது.]

குரல்:-அன்புள்ள செல்லம்! நான் உனக்கு இழைத்தது கொடுமையிலும் கொடுமை. இளமைத் துடுக்கிலே என்னால் அதை உணர முடியவில்லை. பணம் சேர்ந்தவுடன் பக்கத்திலே இருந்த நண்பர்கள் கெடுத்துவிட்டார்கள். காலம் செல்லச் செல்ல உனக்கிழைத்த தீங்கை எண்ணாத நேரமில்லை. ஏன் இப்படி நடந்தோம் என்று பல நாள் கண்ணீர்விட்டு வருந்தியிருக்கிறேன். உண்மையிலேயே நீ செத்துவிட்டதாக நம்பியிருந்தேன். ஆகையினால், உன்னைத் தேடும் எண்ணம் எனக்கு எழவில்லை. நான் பல தீயசெயல்கள் செய்திருக்கிறேன். ஆனால், உனக்கிழைத்த தீங்கிற்கீடாக வேறு எதையும் கூற முடியாது. நீ குடி இருக்க வேண்டிய வீட்டையும்கூட கூசாமல் பிடுங்கிக்கொண்ட

சண்டாளன் நான். இன்று நீ எனக்குத் தந்த அறிவுரைகள் விலைமதிக்கவொண்ணாதவை. இந்தக் கடிதம் உன் கையில் கிடைக்கும்பொழுது நான் எங்கோ வெகுதூரத்திலிருப்பேன். நான் உனக்குத் தீமை செய்தது உண்மை. ஆனால், கமலா ஒரு பாவமும் அறியாத அபலை. அவளைக் கைவிடாதே! கமலாவைக் காப்பாற்றுவது உன் பொறுப்பு! இது என் கடைசி வேண்டுகோள். இனி நீதான் அவளுக்குச் சகலமும்.

*[படித்து முடிந்ததும் மௌனமாக இன்னும் சில அடிதூரம் நடக்கிறார்கள். செல்லம் சிந்திக்கிறாள். அவள் தமயன் குரல் ஒலிக்கிறது.]*

குரல்:-"உன்னை நம்பி விநோதனென்ற இளஜீவன் சுற்றிக்கொண்டிருக்கிறது. அந்தப் பச்சை மண்ணின் எதிர்காலம் உன் கையில்தானிருக்கிறது."]

*[அண்ணனின் இந்தச் சொல் அவள் நினைவிற்கு வரவே உணர்வடைகிறாள். விம்முகிற கமலாவின் கரத்தைப் பிடித்து விநோதன் கையுடன் சேர்க்கிறாள். வெள்ளித் திரையில் ஓர் உருவம் சென்றுகொண்டிருப்பது தொலைவிலே தெரிகிறது. பாபத்தைச் செய்யாதே என்ற துறவு நிலைப்பாட்டு ஒலிக்கிறது.]*

(முற்றும்)

